THE

# GOOD FAIRY

*A TAMIL DRAMA*

BY

**Rao Saheb P. SAMBANDAM, B.A., B.L.,**

Author of:

"The Two Sisters," "The Bandit Chief," "True Love," "Manohara," "Blind Ambition," "The Demon Land." "Fate and Love" , "Sarangadhara," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Galava," "The Two Friends," "The Golden Fetters," "Farces," "Siruthondar," "Markandeya," "The Fair Ghost," "The Merchant of Vanipura," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "Sabapathy," "Geetha Manjari," "Harischandra," "As We Sow-So We Reap," "The Curse of Oorvasi," etc. in Tamil, and "Harischandra," and "Yayathi" in English.

SECOND EDITION

Madras:

PRINTED BY DOWD[illegible] AND CO., AT THE "PEERLESS PRESS,"

21, Sunkurama Chetty Street.

1922.

 (Price per Copy A[illegible] 0-12-0

உ

# நற்குல தெய்வம்

இந்த தமிழ் நாடகம்

ராவ் சாஹெப்

ப. சம்பந்த முதலியார், பி-ஏ., பி-எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

(இந்த நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்ற நூல்கள் :—
"லீலாவதி சுலோசனை," "கள்வர் தலைவன்," "மனோஹரன்,"
"இரண்டு நண்பர்கள்," "சாரங்கதரன்," "வேதாள உலகம்,"
"சத்ருஜித்," "யயாதி," "காலவ:ரிஷி," "அமலாதித்யன்,"
"காதலர் கண்கள்," "பேயல்ல-பெண்மணியே," "மகபதி,"
"மார்க்கண்டேயர்" "பொன் விலங்குகள்," "சிம்ஹளநாதன்,"
"விரும்பிய விதமே," "சிறுத்தொண்டர்," "ரத்னவளி,"
"வாணீபுர வணிகன்," "ரஜபுத்ரவீரன்," "ஹரிச்சந்திரன்,"
"மெய்க்காதல்," "புஷ்பவல்லி," "கீதமஞ்சரி," "சபாபதி,"
"பிரஹசனங்கள்," "ஊர்வசியின் சாபம்," "விஜயரங்கம்,"
"முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும்," "வள்ளி மணம்,"
"புத்த அவதாரம்" முதலியன.) :: :: :: :: ::

இரண்டாம் பதிப்பு




சென்னை :
டேடன் கம்பெனியாரின்
"பியர்லெஸ்" அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1922.

 [விலை அணா 0-12-0

INSCRIBED

TO

THE MEMORY OF

P. VIJIARANGA MUDALIAR,

and

P. MANICKAVELU AMMAL

**MY BELOVED PARENTS**

" Let thy mother be to thee like unto a God
Let thy father be to thee like unto a god "

*Taittiriyaka Upanishad.*

# Preface to the First Edition

This small piece was written by me about twelve years ago for an anniversary performance of the Suguna Vilasa Sabha. I give this to my readers as a type of an opera where the musical element is given great prominence.

I find that some societies—professional as well as Amateur—pay me the compliment of staging my dramas—and then writing for my permission to do so! I should like to inform all societies that my formal permission must be obtained beforehand, as otherwise they would make themselves liable to be proceeded against for infringement of copyright.

"PAMMAL LODGE"
MADRAS.

THE AUTHOR.

# நற்குல தெய்வம்



## நாடக பாத்திரங்கள்

கின்னரன் ... ... நற்குல தெய்வம்

பாஸ்கரன் ... ... காஸ்மீரத்து அரச குமாரன்

விக்கிரமபாஹு ... கன்னமாபுரத்து மன்னன்

ஜகஜ்ஜாலன் ... ... கன்னமாபுரத்து அரசன் விதூஷகன்

பத்மினி ... ... விக்கிரமபாஹுவின் மனைவி

வேதவதி ... ... விக்கிரமபாஹுவின் மகள்

மந்திரி, பலதேசத்து அரசர்கள், சேவகர், தாதியர் முதலாயினோர்.



கதை நிகழிடம் :—கன்னமாபுரத்தை அடுத்த ஓர் வனத்திலும், கன்னமாபுரத்திலும்.

# நற்குல தெய்வம்

## முதல் அங்கம்

இடம்—ஓர் கானகம். காலம்—பகல்.

கின்னரன் ஆகாயத்தில் தோன்றுகிருன்.

ராகம்—நாட்டை.

கி. எண்ணிய படியே இதுவரை முடிந்தது
மண்ணினி லொப்பார் மன்னனுக் கழகினில்
பெண்ணலங் கனிந்த பேதை யொருத்தியே
கண்ணெதிர்ப் படுவோம் காரிகை யுருக்கொடு.

[மறைகிருன்.]

பாஸ்கரன் வருகிருன்.

ராகம்—நாதநாமக்கிரியை.

பா. இன்னமும் வாரான் என்னுயிர் நண்பன்
தன்வழி மறந்து தயங்குகின் ருனே?
தோழா! தோழா!

கின்னரன், தினகரன் உருவத்துடன் வருகிருன்.

கி. இதோ வந்தேன்!

ராகம்—கல்யாணி.

பா. கானகம் கடந்து செல்லக் கண்டையோ மார்க்கமொன்று
போனகம் கொண்டு மீளப் போதுமோ இந்தக் காலம்?

ராகம்—நாயகி. தாளம்—ரூபகம்.

கி. ஏதுநா னுரைப்பேன் தோழா இன்று நாம் எழுந்தவேளை
தீதினைக் குறித்த தாமோ தீயுமி ழிந்தக் கானம்

திரிந்து நா னலைந்துமே தெரிகிலே னோர் வழி
அருந்தியே இதனையே ஆறுவோநா மிளைப்பினை.

பா. தோழா, தாகத்திற் கென்ன செய்வது? என் நா வுலர்கின்றதே !

ராகம்—தேசிக தோடி.

கி. கணமது பொறுத்திரு கொணருவேன் கடிதினில்
பழுதுறிக் கானகம் முழுதுமே சுற்றியேனும்.

[போகிறான்.]

ராகம்—ஆரபி.

பா. நண்ப னிவனும் நண்ணியே பொருளினை
எண்ணுமுன் மகிழ்ந்தே என்னிட முதவுவான்
தன்சுகம் கருதான் தரணியி லென்றும்
என்சுக மேதன் இன்பெனக் கருதும்
இத்தகை நண்பனை ஒத்திருப் பாரோ
எத்தல மீதும் சித்திரப் பாவையர்
துன்பமே வடிவாய்த் தோற்றியே ஆடவர்
இன்பமே நாடி ஏதமே விளைப்பர்.—
ஆ! இதென்ன?

[வேதவதி உருவைக்கொண்டு கின்னரன் படுத் துறங்குவது போல் எதிர்ப்படுகிறான். கின்னரன் மாய்கையால் சிருஷ்டிக்கப்பட்ட சர்ப்பமொன்று படமெடுத்து அவன் முகத்தைக் கவர்ந்து நிற்கிறது. பாஸ்கரன் அச்சர்ப்பத்தை இரு துண்டாக வெட்டுகிறான்.]

ஆ! இதென்ன விந்தை! இதுவரை இப் பெண்மணியை இங்கு கண்டிலன்! காரிகை யாரோ? கானகம் வந்து கண் வளர்வானேன்? கணம் தாமதித்திருப்பனேல் கடும் பாம்பின் வாய்ப்பட் டிருப்பாள். பரமனார் பாகத் தொளிர் பாவையோ? பிரமன்றன் நாவின் பகிழ் பூவையோ? திருப்பாற் கடலி னுதித்த தேவியோ? அனலால் எரிந்த மாறன் ஆவியோ? விண்ணாளும் தேவர்கோன் விழைந்திடு

நங்கையோ? மண்ணாளும் மன்னர்தம் மன்னன் மங்கையோ? அப்படித்தா னிருக்கவேண்டும். உருவத்தை உற்று நோக்கின் இவ் வுலகத்தில் உதித்தவளாகத்தான் தோற்றுகிறது! சித்தஜன் சித்தத்தை யுன்மத்தம் பிடிக்கச்செய் சித்திரப் பாவை யனைய இத்தகை யெழிலாளை இதுவரை நான் எங்குங் கண்டதில்லை. ஐயோ! இத்தனை எழிலும் எத்தனை ஆண்மக்கள் ஆவி யழிக்கப் பெண்ணுருவாய்ப் பிறந்துளதோ? பாபமே பெண் வடிவங்கொண்டு பாரை யழிக்கப் பிறந்ததென வறிந்தும், கந்தமாதனன் மனைவியிடம் காரிகையர் குணத்தைக் கண்டும், இக் கன்னிகையை நான் கண்ணெடுத்துப் பார்ப்பதோ! சீ! இம் மதியை வென்ற வதனமும், வேலை வெறுத்த விழியும், வில்லை வெட்கச்செய் புருவமும், கோவையைக் கரித்த அதரமும்—ஆ! அவ் வரவத்தின் விஷம் இவள் அதரத்திற் றுளித்திருக்கின்றதே! இதை அகலச் செய்யாவிட்டால் அணங்கு ஆவி அழிவாள்! ஐயோ! இதற் கென்ன செய்வது? அயல் மாதரைத் தீண்டினால் அழியாப் பாபம் அணுகுமே! அப்படியே விட்டாலும் அரிவையைக் கொன்ற பாபம் அடையுமே. இத் தர்ம சங்கடத்திற் கென்ன செய்வது? விமலன் விட்ட விதி! முகத்தை வஸ்திரத்தால் மூடி அவ் விஷத்தை அகற்றுகிறேன். [அங்ஙனமே செய்கிறான்.]

கீ. [திடுக்கிட் டெழுவதுபோல் பாசாங்கு செய்து] பாதகா!—

பா. ராஜகுமாரி,—

கி. ராஜகுமாரா, இது உமக் கழகோ? அயர்ந் துறங்கும் அயல் மாதைத் தீண்டும்படி யார் உமக்கு அறம் கற்பித்தது? தாம், ஒரு ஆடவர் என்பதை மறந்தபோதிலும் க்ஷத்ரிய தர்மத்தையும் மறப்பதோ?

பா. ராஜகுமாரி, அவசரப்படவேண்டாம், சற்று நான் சொல்வதைச் செவி கொடுத்துக் கேள். பிறகு என்னை நிந்திக்க வேண்டுமோ, வந்திக்க வேண்டுமோ, தீர்மானம் செய்.

கி. என்ன கேட்பது? அநாதையாய் அருங் கானகத்தில் அயர்ந் துறங்கும்பொழுது—

பா. அயர்ந் துறங்கும்பொழுது ஆடரவம் வந்து உன்னைத் தீண்டவர அதை அடித்துக் கொல்வதோ, அல்லது உன் ஆருயிரை அதற் கிரையாகக் கொடுப்பதோ க்ஷத்ரிய தர்மம்?

கி. ஆயினும் என் முகத்தை யேன்—?

பா. அக் கொடிய சர்ப்பத்தைக் கொன்றபொழுது அதன் விஷ மானது உன் மதியை வென்ற வதனத்தில் விழ, அதை அகற்ற வெண்ணி என் முகத்தை மூடி இது செய் தேன். தவருயின் மன்னிப்பாய். பூரண சந்திரனிடம் அமுதம் இருக்கவேண்டுமேயொழிய விஷ மிருப்பது நியாய மல்லவே.

கி. இந்த வார்த்தை யெல்லாம் நன்ரு யறிவேன் நான்; இது உண்மைதானே நான் அறியவேண்டும். எங்கே மடிந்த சர்ப்பம்?

பா. அதோ, நீயே பார். [சர்ப்ப மில்லாதது கண்டு]—ஆ!

கி. எங்கே?

பா. சற்று முன்பாக இங்கே கிடந்தது, என் கண்ணுற் கண் டேன்! எங்கே போயிருக்கும்?—

கி. ஆம், ஆம்! இறந்த சர்ப்பம் எங்கே போயிருக்கும்? நான் நினைத்த வண்ணமே இருக்கிறது. யாரிடத்தி லிந் தப் பொய்யைக் கூற வந்தீர்? ஏதோ சர்ப்பத்தினின் றும் காப்பாற்றியதாகக் கூறி, என் மதியை மயக்கச் செய்யலா மென்று பார்த்தீரா? போம், போம்! இவ் வித்தை யெல்லாம் நன்ரு யறிவேன் நான்!

பா. ராஜகுமாரி, நீ உன் வாய் திறந்து என்னைப் போகச் சொன்னுல் அதன்படி செய்கிறேன், தடையில்லை. ஆயி னும் நீ யென்னைப் பொய் புகலுபவனுகக் கருதுவது நியாய

மன்று சத்தியமாக நான் கொன்ற சர்ப்பம் சற்று முன்னிங்கிருந்தது மறைந்ததென்ன மாயமோ அறியேன்!—

கி. ஆம், நான் அறிவேன், அறியாப் பேதையரின் மனத்தை ஆடவர் மயக்கிடச் செய்யும் மாயம்!—ஐயோ! தஞ்சையராம் வஞ்சியரைக் கொஞ்சிப் பேசி அஞ்சாது வஞ்சிக்கும் ஆடவரைக் கண்ணெடுத்துப் பார்க்கலாகாதென்று தீர்மானித்து, அருங் கானகத்தை நண்ணியும், என் விதி என்னை விடவில்லையே!

பா. அணங்கே, ஆண்மக்களை ஏன் அவ்வளவு அற்பமாக நினைத்துவிட்டாய்? உனக்கு யார் என்ன தீங் கிழைத்தார்கள்?

கி. தீங் கிழைக்கவேண்டுமோ? எங்களுக்கு வரும் தீங்கெல்லாம் உங்களால்தானே! பெண்ணுற் பெருகு முலகம் ஆணுல் அழிகிறது!

பா. அப்படியா!—

ராகம்—பைரவி.

பாவை யொருத்தியாற் பட்டா னிராமன் படுதுயரம்
பாவை யொருத்தியாற் பச்சைக்கதிரோன் பலனழிந்தான்
பாவை யொருத்தியாற் பாரத மாயதிப் பாரினிலே
பாவை யொருத்தியாற் பாக மிழந்தான் பரமனுமே.

கி. ஒகோ!

ராகம்—அடாணு.

கற்பழித்தான் இந்திரனுங் கவுதமனுர் நன்மனையைக்
கற்பழித்தான் கலைமதியுங் கற்பித்தான் தாரத்தைக்
கற்பழித்தான் வாலியுமே தற்பிறந்தான் காதலியைக்
கற்பழித்தார் கணக்கிட்டால் கடையுகமும் காணுதே.

பா பெண்டிரோ?

ராகம்—பைரவி.

மங்கை யொருத்திசா ரங்க தாணுயிர் மாய்த்தனளால்
மங்கை யொருத்தி கெடுத்தனள் கௌசிகன் மாதவத்தை

மங்கை யொருத்தி தனையனைச் சேர மனமுவந்தாள்
மங்கை யொருத்தி யயாதியின் யௌவன மாற்றினளே.

அன்றியும் காசிபர் முதலிய ரிஷீஸ்வரர்களின் தவமழிந்த தாரால்?

கி. அவர்களாலேயே! பின் புத்தி யுடைய பேதையராம் பெண்டி ரிச்சித்தால் ஆன்ற புத்தியுடைய ஆண் மக்கள் இணங்குவானேன்?

பா. காரணமா கேட்கிறாய்?—

ராகம்—சஹானா.

காதலால் கயிலை நாதன் கங்கையைத் தலைமேற்
கொண்டான்
காதலால் கமல நாதன் கலைமாதை நாவில் வைத்தான்
காதலால் கவுஸ்துவமோடு கட்செவி யுறைவோன்
கொண்டான்
ஆதலால் அவனி தன்னி லதன்புக ழுரைப்பாருண்டோ!

கி. சுகப்படுவ தெங்களால், தூறு சொல்வ தெங்கள்மேல்! இப்படிப்பட்ட ஆடவர் காதல் ஒருகாலும் எனக்கு வேண்டாம்!

பா. பெண்கள் நாயகமே, நீ எல்லா ஆண் மக்களையும் ஒன்றாகத் தீர்மானிக்க லாகாது. சீதா தேவிக்காகப் படாத பாடுபட்ட ஸ்ரீ ராமனை யொத்தவர்களு மிருப்பார்கள்.

கி. சத்தியவானுக்காக யம லோகமுஞ் சென்ற சாவித்திரியைப் போன்ற—

பா. உன்னை நிகர்த்த பெண்டிரு மிருப்பார்கள்'—மங்கையர்க்கரசியே, நீயோ மங்கைப் பருவ மடைந்த ராஜகுமாரியாகக் காண்கிறாய்—

கி. ராஜ குமாரா, நீர் என்ன சொல்லப் போகிறீரென்று எனக்குத் தெரியும். நீர் கேட்டு நான் மறுப்பது தர்ம மன்று. ஆகவே, நீர் கேளா முன்னமே நான் கூறிவிடுகிறேன். தன் தோழன் மனைவியின் துர் நடக்கையைக்

கண்டு, தாணியிலுள்ள தையலரெல்லாம் அத் தகைய ரென வெண்ணி, கன்னியர் முகத்தைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லையென்று தீர்மானித்திருக்கிறாராம், காஸ் மீரத்து மன்னன் மைந்தன். அவ் வெண்ணம் தவறென ரூபித்தற்பொருட்டு அச் சீமானையே கடி மணம் புரியலா மென் றிருக்கிறேன்.—ஆகவே—

ராகம்—சங்கராபரணம்.

பா. கண்ணேகேள் காஸ்மீரக் காவலர்கோன் மைந்தனியான் எண்ணேன்கா ணிழிவாக ஏதிலரை யெப்போதும்.

[கின்னரன் காத்தை முத்தமிடு கிறான்.]

சி. ராஜ குமாரா, ஏது இதற்குள்ளாக தமது தீர்மானத்தி னின்றும் மாறியது ?

பா. உன்னைக் கண்ணாரக் கண்டபின் மாறு திருப்பது எங்ங னம்? சந்திர னொளியின்முன் இருள் நிற்குமோ ? கண் ணே, அதிருக்கட்டும். இக் கடுங் கானகத்தில் நீ தனி யாய் வந்திருக்கவேண்டிய காரணமென்ன ? உன்னைப் பெற்றோர் மனம் துணிந்து இங்கு உன்னை எப்படி யனுப் பினார்கள் ?

சி. என் தந்தை விக்கிரமபாஹு—

பா. ஆ ! விக்கிரமபாஹுவின் குமாரத்தியா நீ ?

சி. ஆம், பிராணநாதா ! இதற்குள் மாற ஆரம்பித்துவிட் டீரா ? இதுதானோ முன்பு தாம் கூறிய நியாயம் ?

பா. கண்ணே, அதல்ல ; உன் தந்தை யொருகாலும் உன்னை மணக்க வெனக்கு விடை யளியாரே, தெரியுமா வுனக்கு ?

சி. ஆம், தெரியும். அதற்கொரு யுக்தி சொல்கிறேன். நான் சுயம்வரம் ஒன்று ஏற்படுத்தி அதில் தம்மையன்றி வே றெவராலும் முடித்தற் கரிய சுல்கமொன்று ஏற்படுத்து கிறேன். தாம் வந்து அதை வென்று என்னைப் பெறும். அப்பொழுது பிதா ஒன்றும் கூறார்.

பா. எப்பொழுது இந்த சுயம்வரம்?

கி. பிராணநாதா, என் நா உலர்ந்து போகிறது. எனக்குக் கொஞ்சம் தாகத்திற்கு ஜலம் கொண்டுவாரும். எல்லா வற்றையும் பிறகு சவிஸ்தாரமாகச் சொல்லுகிறேன்.

பா. இதோ க்ஷணத்தில் வருகிறேன். இதோ இப் பழ வர்க்கத்தைப் புசித்துப் பசியாறு. ஜாக்கிரதையாக இங்கு தானிரு. [விரைந்து போகிருன்.]

ராகம்—ஆரபி.

கி. சடிதினில் வேலே, முடிந்தது பாதி.
தேடியே யென்னைக் கூடிடு முன்னர்
இவ் வுரு வகற்றி செவ்வுரு மார்பனைத்
திலகர னுருக்கொடு மனதினைக் கவரும்
கன்னமா புரத்தின் மன்னி யாங்குறை
காரிகை தன்னைக் கோரிக் காண்போம்.
[மறைந்து போகிருன்.]

பாஸ்கரன் ஜலத்துடன் திரும்பி வருகிருன்.

பா. இதோ!—எங்குற்ருய் காதலி?
கண்டது கனவோ, கண் கட்டி மாயமோ?
வண்ண விந்தையே! நண்ப னெங்குற்ருன்?
கண்வளர் கனவல! கண்படும் பழ மிதோ!

ஐயோ!

ராகம்—சங்கராபரணம்.

வாராப் பிழைபற்றி வையத்தி லென்னையே
பாராது செல்லப் பரிந்தனளோ—காராது
கடும்கா னகத்தே கரடி புலிவாய்
படும்காற் பதகனை விட்டு.

ஐயோ! அதோ திலகரன் வருகிருன். அவனிடம் என்னென் றுரைப்பது?—

கின்னரன், தினகரன் உருவத்துடன் ஜலம் கொண்டு வருகிறான்.

கி. தோழா, என்னை மன்னிப்பாய். போன இடத்தில் சற்றே நேர மாயது.— என்ன ஒருவாறாக நிற்கிறாய்? என்ன சமாசாரம்?

ராகம்—எதுகுல காம்போதி.

பா. எதுரைத் திடுவேன் தோழா ஏந்திழை யோர ணங்கு
போதுடை யரவின் வாயிற் குறிப்படத் தோன்ற விங்ஙன்
மாதென எண்ணி நாணம் மாசுணம் வாயகற்ற
சூதுசெய் தென்னை யந்தோ சூன்யமாய் விட்டாளன்றே.

கி. தோழா, என்ன பரிகாசம் செய்கிறாய்! அருங் கானகத்தில் ஆரணங்கு கண்படுவதாவது? கடும் பாம்பின் வாயினின்றும் அவளை நீ காத்திட, பிறகு கண்ணுக்குப் புலப்படாது கரந்திடுவதாவது! கனவு கண்டாயோ? கானக மாயமோ?

பா. தோழா, நான் பொய் யுரைப்பேனோ?

கி. ஆயின் அம்மா தின்னாரெனக் கேட்டறிந்தனையோ?

பா. கன்னமாபுரத்து மன்னன் கன்னிகையெனக் கூறினள்.

கி. இதென்ன ஆச்சரியம்!

ராகம்—மோஹனா.

மன்னர்முக நோக்கேன்யான் மண்டலத்தென் வாணாளைக்
கன்னியெனக் கழிப்பனெனக் கட்டுரைசெய் தாள்ளாளக்
கன்னபுரக் கட்டழகி கரியரிசூழ் கடுங்கானில்
மன்னியுன்றன் கண்ணெதிரின் வருஞ்சூழ்ச்சி யறியேனே
இங்கு அவள் தனியாய் வருவானேன்?

பா. பிறகு அதை யோசிப்போம். தினகரா, இக் கானகம் நீங்கி நாளை கன்னமாபுரம் போய்ச் சேரவேண்டும்.

கி. என்ன அங்கு விசேஷம்?

பா. அவ் விராஜ குமாரியின் சுயம்வரம்.

கி. சுயம்வரமானுல் உனக் கென்ன வேலை அங்கே? நீதான் கன்னியரைக் கனவிலுங் கருதுவ தில்லையென்று சபதஞ் செய்திருக்கிருயே!

பா. அதெல்லாம் அவ் வழகியைக் காணுமுன்.

கி. கண்டபின் வே றுத்தேசமே? சரிதான். நீ கண்டது கனவோ என்று சந்தேகித்தேன் சற்று முன்பு. உன் புத்தியையே கலக்கவல்லது காற் றுருவா யிராது, கண்ட துண்மையாகத்தா னிருக்கவேண்டும். அதிருக்கட்டும், இப்பொழுதாவது ஸ்திரீகளைப்பற்றி நான் கூறிய துண் மையென ஒப்புக்கொள்கிருயா, மாட்டாயா?

பா. அப்பொழுதே ஒப்புக்கொண்டேன்.

கி. அப் பெண்மணியிடமோ?—வெட்கமின்றி—

பா. விளையாட் டப்புற மிருக்கட்டும். காட்டைவிட்டு வெளி யே போவோம் முன்பு, புறப்படு.

கி யார் விதி யாரைவிட்டது! வா போவோம்.

[போகிருர்கள்.]

முதல் அங்கம் முடிகிறது.



# இரண்டாம் அங்கம்

---

இடம்—அரச குமாரியின் நந்தவனம். காலம்—மாலை.

பத்மினி ஒரு பக்கமாகவும், வேதவதி ஒரு பக்கமாகவும்
ஒருவரை யொருவர் பாராது வந்து,
ஒரு செடியின் இருபுறத்திலு முள்ள ஆசனத்தில்
உட்காருகின்றனர்.

இருவரும் பெரும் பாபம் ஏதோ முன் செய்தே இப்பொழுது
பெண் ஜென்மமாய்ப் பிறந்திருக்க வேண்டும் நான் !

கண்ணிகள்—ராகமாலிகை.

ப. மக்களில்லையென்று மகநூறு யானிழைத்துத்
தக்க பெண்ணைப் பெற்றுத் தயங்கிட லானேனே.

வே. பெண்ணாய்ப் பிறந்து நான் பெற்ற பலனிதுவோ
எண்ணத்தின்படி யென்னை ஏனோ விடாரந்தோ.

ப. பக்கத் தரசியர் பலர் நகைக்க லாச்சே
இக்கட்டி லெண்ணியே இப்படி விடுவாளோ.

வே. புண்ணாக என்னெஞ்சம் புவியில் நான் மணப்பதோ
கண்ணாளனை விட்டுக் காதகனொருவனை,

ப. பெற்றோரிடம் பெண் பிடிவாதம் செய்வதோ
கற்றாளே காரிகை காரண வாதாட.

வே. பெற்றோரே என்றனைப் பிடிங்க னழிப்பதோ
உற்றோரே கூற்றானல் உதவுவார் யாவரே.

ப. சிற்றறி வீதாகும் சிறியோர் நீதியைக்
குற்றம் கூறலாமே குழவி யறியுமோ.

வே. பற்றொன்று மில்லாத பாதகர் கைப் பட்டுநான்
உற்று நடுங்கவோ உன்மத்த மிதினுண்டோ.

ப. மணமென்ப தீதென்று மாதவ ளறியாளே
குணமொன் றறியாத கோதையென் செய்குவாள்.

வே. மணமென்ப தின்னதென்று மாதாவே யறியாது
கணமு மோயாதென்னைக் கவலையில் விடலாமோ.

ப. மதன் மலர்வாளிகள் மா திவளை வெல்ல
கத மிலாதாகிய காரண மேதோ.

வே. மனதுக் கினியநாதன் மணப்ப தசாத்தியம்
மங்கையாய் மடிவதே மாதென் விதியாகும்.

ப. இதமாகவே நூறு எடுத்தெடுத் துரைத்தேனே
பதம் பணியாக் குறை பாரினி லொன்றுதான்.

வே. தினமுமித் தொல்லையே தெரிவையென் பாக்கியம்
இனிமே லுயிருடன் இருப்பதென் சிலாக்கியம்.

ப. ஐயோ! இதற் கென்ன செய்வ தினி நான்? மஹாராஜாவோ மிகவும் கோபங்கொண் டிருக்கிறார். எப்படியும் சீக்கிரம் விவாகம் செய்விக்கவேண்டு மென்கிறார். இந்தப் பெண்ணோ ஒரே பிடிவாதமாய் விவாகமே வேண்டா மென்கிறாள். என்ன காலம்! என்ன காலம்! எங்கள் இளம் பருவத்தில் விவாகமென்றால் எவ்வளவோ விருப்பங்கொண் டிருப்போம். வேதவதி விவாக மென்கிற பேச்சைக் கேட்டால் வெறுக்கிறாள்! ஒரு புறம் கணவன்! ஒருபுறம் பெண்! இந்தத் தர்ம சங்கடத்திற் கென்ன செய்வது?

வே. ஐயோ! நமது பெற்றோர் வயதில் மூத்தோராயினும் இது தெரியாம லிருக்கிறதே! இவர்கள் மனதுக் கினிமையாக நான் எப்படி மணம் புரிவது? விவாகஞ் செய்துகொண்டு சுகதுக்கங்கள் அனுபவிக்கவேண்டியவள் நானன்றோ? காஸ்மீர தேசத்து அரசிளங் குமரனை மணக்கவிடப் போகிறதில்லை என் தந்தையார்; அவ்வார்த்தையைக் கேட்கினும் என்மீது அடங்காச் சினங் கொள்வார். மணந்தால் என் மனத்துக்கினிய நாதனை மணப்பேன். இல்லாவிடின் எனக்கு விவாகமே வேண்டாம்! நான் என்ன அவர்களை நிர்ப்பந்திக்கிறேனா என் காதலருக் கென்னை

மணம் புரியும்படி ? அவர்கள் ஏன் என்னை மணம் புரியும் படி நிர்ப்பந்திக்கவேண்டும்? ஒருபுறம் தந்தை தாயர்! ஒருபுறம் சா மளவும் துயர்! இந்தத் தர்ம சங்கடத்திற் கென்ன செய்வது ?—

இருவரும். இனி யோசிப்பதிற் பயனில்லை. கடைசி முறை போய் கேட்டுப் பார்ப்போம்—

[எழுந்து ஒருவரை யொருவர் சந்திக்கின்றனர்.]

ப. வேதவதி !

வே. அம்மா !

ப. உன்னைத்தான் தேடிக்கொண்டு வந்தேன்.

வே. நானும் உம்மையே நாடி வந்தேன்.

ப. கண்ணே, இப்படி உட்கார், நான் சொல்வதைக் கேள். என் கண்ணல்ல நீ! உனக்கோ வயதாகிவிட்டது. இனி விவாகமின்றி யிருப்பது நியாய மல்லவே! எத்தனை காலந்தா னிப்படி தனியா யிருப்பது நீ? விவாக மென் கிற பேச்சைக் கேட்கினும் ஏன் வெறுப்படைகிறாய் நீ?

வே. அம்மா, நான் சொல்வதையும் சற்று கேளுமே. என்னைப் பெற்ற தாயல்ல தாம்! என்மீது கோபியாதீர். எனக்கு விவாகத்தின்மீது விருப்பமே யில்லை. அப்படி யிருக்க நான் விவாகஞ் செய்துகொண் டென்ன பயன்? எப் பொழுதும் நான் கன்னிகையாகவே இருந்துவிட்டால் என்ன தவ றிதில்?

ப. ஐயோ! நீ அறியாப் பெண், உனக் கொன்றும் தெரி யாது. இது க்ஷத்ரியர்களாகிய நமது குல ஒழுக்க மன்று, நான்கு பெயருக்கு நகைப்பாகும்.

வே. நான்தான் அறியாப் பெண், ஒன்றும் தெரியாதென் கிறீர்களே! அப்படியே இருக்கட்டும். நான் அறிந்தவ ளாகியபின் விவாகத்தைப்பற்றி யோசிப்போம். இப் போது அவசரமென்ன?

ப. அப்படி யல்ல. உன் பிதாவுக்கோ வயதாகி வருகிறது எங்களுக்கு உன்னை யன்றி வேறு சந்ததி யில்லை என்பது நீ அறியாத விஷயமன்றே. உன் பிதாவோ உனக்கு விரைவில் மணம் செய்வித்து துறவறம் மேற்கொள்ள எண்ணுகிறார். உன் தந்தை மனம் கோணச் செய்யலாமோ நீ? இவ் வைம்பத்தாறு தேசத்து ராஜ குமாரர்களில் யாரை வேண்டினும் உனக்கு மணஞ் செய்விக்கிறேன்.

வே. அது அசாத்தியம்.

ப. எது அசாத்தியம்? கண்ணே, மனத்தில் எதோ நினைத்துக் கொண்டிருக்கிறாய். இன்னதென்று சொல் என்னிடம்.

வே. ஒன்று மில்லை யம்மா. எனக்குத் தக்க புருஷனாக ஒரு ராஜகுமாரனும் காணப்படவில்லை ஆகவே எனக்கு விவாகமே வேண்டா மென்கிறேன்.

ப. நீ என்ன, எல்லா அரச குமாரர்களையும் கண்டிருக்கிறாயா என்ன? இதோ நம்முடன் சம்பந்தம் செய்தற்குத் தக்க விவாகத்திற் குரிய அரசிளங் குமாரர்களின் படங்களெல்லாம் வரவழைத்திருக்கிறேன். அவற்றைப் பார்த்து உன் கண்ணுக் கினிய புருஷனைக் கூறு. உன் பிதாவிடம் சொல்லி அப் புருஷனுக்கே உன்னை மணஞ் செய்விக்கிறேன்.

வே. ஐயோ! அம்மா, உமக்கே னிந்தக் கஷ்டம்? இதில் பிரயோஜன மில்லை, யம்மணி.

ப. அப்படி யல்ல, நான் சொல்வதைக் கேள்?—யார் அங்கே?

ஜகஜ்ஜாலன் வருகிறான்.

ஜ. அம்மணி!

ப. நீதான் சரி. அந்தப்புரத்தில் வசந்த மண்டபத்தில் ராஜ குமாரர்களின் படங்களெல்லாம் வைத்திருக்கிறது. அப்படியே ஜாக்கிரதையாய் எடுத்துக்கொண்டுவா விரைவில்.

ஜ. அப்படியே, இதோ. [விரைந்து போகிருன்.]

வே. அம்மா, அப்படித்தான் கோரினேன், அதன்படி எனக்கு விவாகம் செய்வித்தீர்கள், அந்த ராஜகுமாரன் என்மீது காதலோடு வாழ்வாரென்பது என்ன நிச்சயமம்மணி? என் சுகத்தை யல்லவோ தாம் எப்பொழுதும் கருத வேண்டும்.

ஒரு கட்டு படங்களைக் கையி லெடுத்துக் கொண்டு
மறுபடியும் ஜகஜ்ஜாலன் வருகிருன்.

ஜ. அப்பா! அப்பா!—

ப. ஜகஜ்ஜாலா. இதுவா பளுவாயிருக்கிறது உனக்கு?

ஜ. என்ன, அம்மணி, இத்தனை ராஜ குமாரர்களையும் சுமப்ப தென்ருல் இலேசா!

ப. கொடு இப்படி.—இதோ பார், வேதவதி.

ராகம்—சௌராஷ்டிரம்.

அங்க தேசாதிபதி, அவனிக்கோர் மகிபதி
பங்கமொன்றிலா வீரன், பாருளோர்க் கதி சூரன்.

வே. முகத்தை நோக்கு மம்மா மூர்க்க குணமுடையான்
ஜெகத்தினி லிவனிடஞ் சிக்கியா னழிவதோ?

ஜ. அடடா! கொஞ்சம் காட்டுங்க ளம்மணி! வாஸ்தவம்! இப்பொழுதே இவ்வளவு முடுக்கா யிருக்கிறவர் கலியாண மாப்பிள்ளையானுல் கேட்கவேண்டிய தில்லை அப்பா! எனக்கே பயமா யிருக்கிறது.

ப. இதோ பார்!—
மகதத்து மன்னன் இவன், மண்டலேஸ்வரனுவான்
பகதத்த னெப்பான் பாரினி லிவன் தான்.

வே. ஐயோ!
உடலே பெருத்திருக்கும் உன்மத்த னிவனையோ
அடலே றனையனென அறைந்திட்டீர் அம்மணி!

ஜ. எதோ ! எதோ ! சரி ! பளுவெல்லாம் இந்த ஐயா தநன்— என்னைப்போ லிருக்கிறுர், இவரது ஒரு காலுக்கு எட்டு பெயர், குறைந்த பட்சம் ஐம்பது பெயர், வேண்டும்— தூக்கிக்கொண்டுபோக.

ப. ஜகஜ்ஜாலா, விளையாடாதே இப்பொழுது.

ஜ. இல்லை, யம்மணி; உண்மையைக் கூறினேன்.

ப. ஆ ! இதைப் பார் !

மச்சதேசத்து மன்னன் மாரப் பிரா தபன்
இச்சகத்தில் இவன் எழி லுக் கிணையிலேயே.

வே. ஆமாம் !

கன்னினை நோக்கிடும் கருணையில் காதகன்
மண்ணிலே மரித்தாலும் மாலையா னிடேனே !

ஜ. ஆஹா !—அம்மணி ! அதுவு மல்லாமல் ஐயாவுக்கொரு கண்தா னிருக்கிறதுபோல் தெரிகிறது.

ப. சே ! இன்னெரு கண் பின்புற மிருப்பதாகப் பாவனை படத்தில்

ஜ. ஒகோ ! சரிதான், புத்தியும்கூடப் பின்புறமாக இருப்ப தாகப் பாவனை !

ப. இதோபார், வங்கத்து மன்னன்—கிஷ்கிந்தைக் காவலன் —சோழராஜன்—காம்பிலி யரசன்—

வே. ஐயோ ! இதெல்லா மெதற் கம்மணி ? இவைகளைப் பார்க் கப் பார்க்க எனக்குத் தலை நோ வெடுக்கிறது.

ப. அப்படி யல்ல; நீயாக இவைகளை யெல்லாம் பார்த்துச் சொல்.

[மற்றவைகளை யெல்லாம் வேத வதியிடம் கொடுக்க அவைகளை அவள் கீழே எறிந்து விடு கிறுள்.]

ஜ. ஒரு கை விசுக்கினுல் எத்தனை ராஜ குமாரர்கள் கீழே விழுந்தார்கள் !

விக்கிரமபாஹு வருகிறார்.

வி. வேதவதி!

ப. பிராணநாதா! கோபித்துக் கொள்ளாதீர்! ஏதோ அறியாமையாற் செய்தாள்—

வி. அறியாமை இதற்கு மாத்திரம்! அடம் செய்வதிற் கில்லையோ? அறியாக் குழந்தை யென்று பொறுத்துப் பொறுத்தாயிற்று. அரை க்ஷணமும் பொறுக்கமாட்டேன் இனி. அயல் நாட் டரசர்களுக்கெல்லாம் அவமான மாகிறது பெண் போன வழி போகிறானென்று! தினம் வந்து கேட்கும் அரசர்களுக்கெல்லாம் எத்தனை காலம் போக்குச் சொல்லிக்கொண்டு வருகிறது?— இதோ அஸ்தினா புரத்துமன்னன் தன் இளங் குமாரனுக்கு உன்னை மணம் புரியக் கேட் டனுப்பியிருக்கிறார். என்ன சொல்கிறாய்?

வே. அண்ணா! அண்ணா! அந்த ராஜகுமாரன் வேண்டாம்! வேண்டாம்! அவருக்கு முன்பே விவாகமா யிருக்கிறதே! நான் அவர் இரண்டாவது மனைவியாகி வாழ்வதோ?

ப. பிராணநாதா, எத்தனையோ ராஜகுமாரர்கள் நமது பெண்ணை வரிக்க நமது ஒரே புதல்வி பட்டமஹிஷியாகாது இரண்டாந் தார மாவதோ? இது எனக்கு இஷ்ட மில்லை.

வி. எனக்கும் இஷ்ட மில்லை. இந்த ராஜ குமாரனையே மணம் செய்து கொள்ளென்று பலவந்திக்க வில்லை. எப்படியாவது உனக்கு விவாகம் செய்விக்கவேண்டும் விரைவில் என்பதே என் கோரிக்கை; வேதவதி, என்ன சொல்கிறாய்? நான் ஐம்பத்தாறு தேசத் தரசர்களையும் வரவழைக்கிறேன். யார் உனக்கு இஷ்டமோ அந்த ராஜகுமாரனை உனக்கு மணம் செய்விக்கிறேன். விவாகமே வேண்டாமென்று பிடிவாதம் செய்யாதே; என்ன சொல்லுகிறாய்?

வே. அண்ணா, நான் விவாகமே வேண்டாமென்று கூறவில்லை. எனக் கெப்பொழுது விருப்பமோ அப்பொழுது விவா

கஞ் செய்துகொள்ள விடை யளியும்.

[பிதாவின் பாதத்திற் பணிகிறாள்.]

வி. விடு என்னை, தீண்டாதே! வேண்ட வேண்டத் தாண்டவ மாடுகிறாயா? பெண்களுக்குக் கல்வி பயிற்றுவிக்கும் பேதமை இதுதான்! சரி! உன் பிடிவாதத்தைப் போக்கும் விதத்தில் போக்கவேண்டும். நாளைத்தினம் உன்னை எவன் வந்து கேட்டபோதிலும், கூனா யிருந்தாலும் சரி, குருடா யிருந்தாலும் சரி, குஷ்டனா யிருந்தாலும் சரி, அவனுக் குன்னை மணம் செய்விக்கிறேன் பார்!

ஜ ஆனால் எத்தனை ராஜ குமாரர்கள் இருக்கிற கண்ணையும் குத்திக்கொண்டு குருடாய் வருவார்கள் நாளைக்கு!

வி. உன்னை யார் கேட்டது? ஜகஜ்ஜாலா, உனக் கெத்தனை முறை சொல்லி யிருக்கிறேன் நான்?

ஜ. அநேகம் தரம்—கோபம் கூடாதென்று!—ஆ! இதோ வந்தேன்! [விரைந்து போகிறான்.]

ப. பிராணநாதா, அவள் பிடிவாதம்செய்கிறாளென்று தாமும் பிடிவாதம் செய்வதா? யாராவது பெற்ற பெண்ணை—

வி. சரி! நீ யெனக்குப் புத்தி சொல்ல வருகிறாயோ! எல்லாம் உன்னால் வருவது! உன் புத்திதான் உன் பெண்ணுக்கும் படிந்திருக்கிறது! உன் விவாகத்திற்கு முன் நீ எவ்வளவு பிடிவாதம் செய்தாய்?—அந்தக் குணம் படிந்தது உன் பெண்ணுக்கும்!—

ப. உம்! அப்படி யிருந்தபடியினால்தான் உம்மை மணம் புரிந்தேன். இல்லாவிட்டால் என் தந்தை கூறியபடி—

வி. அதெல்லாம் உன்னைக் கேட்கவில்லை இப்பொழுது.—இதோ கடைசி வார்த்தை. வேதவதி! உன் பிடிவாதத்தை விட்டு என் சொல்லுக் கிணங்காவிட்டால் நாளை என் சொற்படி முடிப்பேன், ஞாபக மிருக்கட்டும்.

[போகிறார்.]

ப. வேதவதி, என்ன என்ன கஷ்டத்திற்குக் கொண்டு வருகிறாய் பார்.

வே. அதிருக்கட்டும் அம்மா, நீங்கள்கூட உங்கள் கலியாண காலத்தில் இப்படித்தான் பிடிவாதம் செய்தீரோ? அதென்ன சமாசாரம்? எனக்கு விளங்கச் சொல்லுங்களம்மா.

ப. ஐஐயோ! போதாக் குறைக்கு அது ஒன்றா? சும்மா இராது அதையும் உனக்குச் சொல்லிவிட்டாரே!— ஒன்றுமில்லை, நான் சொல்வதைக் கேள்—

வே. உம், உம்! அது சொன்னால்தான்—

ப. ஒன்றுமில்லை, என் பாட்டனார் சாளுவதேசத் தரசனுக்கு மணம் செய்யவேண்டுமென்று பலவந்தம் செய்தனர், நான் ஒரே பிடிவாதமாய் உன் தகப்பனாரையே மணம் செய்துகொள்ள வேண்டுமென்று என் எண்ணப்படியே முடித்தேன், அவ்வளவே—

வே. நினைத்தேன்!—அம்மா, நீங்களே அப்படிச் செய்துவிட்டு என்னைப் பலவந்திக்கலாமா தாங்கள்?

ப. நானென்ன, விவாகமே வேண்டாமென்று சொன்னேன் அப்பொழுது?

வே. நானென்ன, விவாகமே வேண்டாமென்று சொன்னேன் இப்பொழுது?

ப. ஆனால் எப்பொழுது நீ விவாகஞ் செய்துகொள்வது? நாங்களெல்லாம் இறந்த பிறகோ? நாங்கள் கண்டு கண் குளிரக் கூடாதென்றா இத்தனை பிடிவாதம் செய்கிறாய்? உன்பேரில் தவறில்லை. உன் மதியை மயக்க ஒரு மன்னன் பிறந்திராமற் போகான். அவன் வந்து நேர்ப்படுவானாயின் பிறகு நீயாக வந்து 'எனக்கு விவாகஞ் செய்யுங்கள், விவாகஞ் செய்யுங்கள்' என்று வேண்டுவாய அப்பொழுது நான் பிடிவாதம் செய்யவேண்டும். அப்பொழுது தெரியு முனக்கு!

ஜகஜ்ஜாலன் மறுபடியும் வருகிறான்.

ஜ. அம்மா, தங்களை மகாராஜா அழைத்துவரச் சொன்னார்.

ப. இதோ வந்தேன்.—வேதவதி, இதோ, நான் போய் சமாதானப்படுத்துகிறேன் மஹாராஜாவை, இதற்குள் நான் சொன்னபடி தீர்மானம் செய், தெரியுமா? [போகிறாள்.]

வே. உம்!—ஜகஜ்ஜாலா, ஏன் மகாராஜா என் அன்னையை அழைத்தார்கள்? தெரியுமா உனக்கு?

ஜ. யாரோ ஒரு ராஜகுமாரன் வந்திருக்கிறாற்போ லிருக்கிறது உம்மை விவாகத்திற்காகக் கேட்க—

வே. ஐயோ! நினைத்தேன்! நினைத்தேன்! யார் அது? யார் அது?

ஜ. யாரோ தெரியா தம்மணி எனக்கு.

வே. எப்படி யிருக்கிறா ரவர், அதையாவது சொல்.

ஜ. என்னமா யிருக்கிறா றென்றால்—ஒரு கண் பொட்டை! இன்னொரு கண்ணே யில்லை! ஒரு கை கொஞ்சம் நொண்டி, மற்றொரு கை யுத்தத்தில் வெட்டுண்டதாம்! ஒரு கால் முடம்! இன்னொரு காலுக்குப் பதிலாய் கட்டை யூன்றி நடக்கிறார்! தேஜஸ் என்னமோ சூரியனும் சந்திரனும் கலந்த மாதிரியா யிருக்கிறது! முகத்தைப் பார்த்தால் கிஷ்கிந்தை அரசனைப்போல் தோன்றுகிறது!—

வே. ஜகஜ்ஜாலா! என்னைப் பரிகாசம் பண்ணுகிறாயா நீ! போ நீ, இங்கு நில்லாதே!

ஜ. உத்தரவு.—கேட்டதைச் சொன்னேன்.—கோபம் வேண்டாம். [போகிறான்.]

வே. ஐயோ! பாரோர் நகைக்கப் பாவையாய்ப் பிறந்தேனே பாவி நான்? ஜகஜ்ஜாலன் கூறியது குறும்பா யிருந்த போதிலும், என் மனத்துக் கினிய மாரனை மணக்காது வேறொரு மன்னனை மனத்திலும் எண்ணுவ தெப்படி?

பிதாவோ பிடிவாத முடையவர்!— ஐயோ! பிராண நாதா! நீர் காஸ்மீர மன்னனுய் ஏன் குவலயத் துதித் தீர்! வேறெந்த நாட்டரசனுகவாவது பிறந்திருக்கலாகா தா? அல்லது நானுவது பெண்ணுகப் பிறவாதிருக்க லாகாதா? பெண்ணுகப் பிறந்தாலும் உம தழகிய உருவை அறியாதிருக்க லாகாதா? சித்தஜனை வென்ற உமது வடிவழகை நான் கண்டபின் வேருெரு புருஷனை நான் சிந்திக்கவு மாகவில்லையே! பிராணநாதா! பிராண நாதா!—ஐயோ! என் கருத்தாளும் காதலரின் கணைக் காலின் கவினுகாதே என்னைக் கடிமணம் புரிய நாடும் இதோ கவிழ்ந்து கிடக்கும் காதகர்களின் ரூபம்!

[கின்னரன் பாஸ்கரன் உருவத் துடன் படுத்துறங்குவதுபோல வேதவதி கண்ணெதிரில் தோற்றுகிருன்.]

ஆ! இதென்ன விந்தை! சித்தப்பிரமையா? உருவெளித் தோற்றமா? அல்லது கனவு காண்கிறேனே?—சற்று முன்பாகக் காணுேம், திடீரென்று என் கண்ணெதிர்ப் பட்ட தேது? இதென்ன மாயமோ? என் பூஜா பலமோ? என் னிஷ்ட தேவதையின் செய்கையோ, இங் ஙனம் என் காதலனைக் கண்ணுரக் காணச் செய்தது?—

[தன்னிடம் ஒளித்துவைத்திருந்த பாஸ்கரன் படத்தை வெளியே எடுத்து]

ஐயோ! எப்பாதகன் இப் படத்தில் இவர் உருவத்தை வரைந்தான்? கண்ணைக் கவரும் காதலன் கவினில் காற் பங் கில்லையே இது! சீ! இதைப் பார்ப்பது பாதகம்!

[அப் படத்தைக் கீழே எறிந்து விடுகிருள்.]

அயர்ந்து நித்திரை செய்கிருர்!—ஐயோ! இவரைப் பிதா இங்கு கண்டால் பெருந் தீங்குக் கிடமாகுமே! நான் என்ன செய்வது? பிதா திடீரென்று இங்கு வந்துவிட் டால்? ஐயோ! இவரை எழுப்புவோமா? எப்படி எழுப் புவது?—எனக்கு நாணமா யிருக்கிறது! ஐயோ! காத்

லொருபுறம் வலிக்கிறதே!—எப்படியும் என் பிராண நாதரை இவ் வாபத்தினின்றும் காப்பாற்ற வேண்டும். என்ன செய்வது? அவர் விழித்தால் ஏதாவது தவருக எண்ணுவாரோ?—எண்ணமாட்டார்! அவர் உயிரைக் காப்பாற்றும் பொருட்டு தானே செய்கிறேம்.

[மெல்ல கையை தொடிக்கிருன்.]

கேட்டிராது [பாட்டு பாடுகிருன்.]

இதிலும் எழுந்திருக்கவில்லையே!

[ஒரு புஷ்பத்தை அவன் முகத்தின்மீது எறிகிருள்.]

ஐயோ! எதனுலும் இவர் நித்திரை நீங்கவில்லையே!—ஆ! அதோ பேச்சரவம் கேட்கிறது! பிதா வருகிருற்போலிருக்கிறதே! எப்படியும் எழுப்பவேண்டும். தீண்டியாவது எழுப்புவோம்!

[கின்னரன் இருக்குமிடம் விரைந்து செல்ல அவன் மறைந்து போகிருன்.]

ஆ! பிராணநாதா! பிராணநாதா!—எனக்கென்ன பயித்தியம் பிடித்திருக்கிறதா என்ன! எங்கே என் பிராணநாதர்? சற்று முன்பாக என் கண்ணுரக் கண்டேனே! எங்கு மறைந்தார் இதற்குள்ளாக? எனக் கொன்றும் தோன்றவில்லை. நானென்ன கனவு கண்டேனே? இல்லை! இல்லை! என் கண்ணுரக் கண்டது எப்படி கனவா யிருக்கும்?—காதலா! காதலா! என் பேதை மனத்தைத் தாம் இவ்வாறு பரிசோதிக்கிறீரோ? இதென்ன கண்கட்டி மாயம்? எப்படி வந்தார்? எப்படிச் சென்ருர்?

[தேடுகிருள்.]

ஜகஜ்ஜாலன் மறுபடியும் வருகிருன்.

ஜ. [கீழே கிடக்கும் பாஸ்கரன் படத்தைக் கையி லெடுத்துக்கொண்டு] ஓ!—

வே. ஜகஜ்ஜாலா!—

ஜ. அம்மணி!

வே. உம்—நீ இந் நேரம் எங்கிருந்தாய்?

ஜ. பூமியின்பேரில்.

வே. விளையாட் டொருபுற மிருக்கட்டும்.—ஜகஜ்ஜாலா, நான் ஒன்று கேட்கிறேன், உண்மையைக் கூறு.

ஜ. நான் ஏதாவது பொய்—

வே. கூறமாட்டாய் தெரியுமே எனக்கு.

ஜ உம்!—

வே. ஜகஜ்ஜாலா, சற்று முன்பாக இங்கு யாராவது வந்தார்களா?—தெரியுமா உனக்கு?

ஜ. உம்! —ஜோஸ்யம் பார்த்துச் சொல்லுகிறேன்.

வே. விளையாடாதே மறுபடியும்—

ஜ. விளையாடுகிறேனே? எனக் கென்ன ஜோஸ்யம் தெரியாதா? அமிர்தலிங்க ஜோஸ்யர் சிஷ்யனும் நானும் ஒரே நாள் பிறக்கவில்லையா? உம்!—

வே. சீ!—யாராவது நமது உத்யானவனத்திற்குள் சற்றுமுன் பாக வந்தார்களா தெரியுமா உனக்கு?

ஜ. உம்—ஒரு ராஜகுமாரர் தவிர வேறு யாவரும் வரவில்லையம்மணி?

வே. ஆம், ஆம். எங்கே அவர்? எங்கே அவர்?

ஜ. ஆ! என் ஜோஸ்யத்தை நம்பமாட்டேன் என்று சொன்னீர்களே, இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்?—

வே. ஆமாம், அந்த ராஜகுமாரர் எப்படி யிருப்பார் சொல், பார்ப்போம்.

ஜ. சொல்லட்டுமா?

வே. சொல், பார்ப்போம்.

ஜ. "ஒரு கண் பொட்டை, மற்றொரு கண்ணே யில்லை."—

வே. ஜகஜ்ஜாலா! என்னை ஏளனம் செய்கிறாயா? நான் மஹாராஜாவிடம் போய்ச் சொல்லுகிறேன்!—

ஜ. அம்மணி, அவ்வளவு கோபம் வேண்டாம்.—இதோ ஜோஸ்யம் பார்த்துச் சொல்கிறேன், கேளும்.—இடது பக்கம் கன்னத்திற் சிறு மருள் இருக்கிறது.

வே. ஆம், ஆம்!

ஜ. ஜோஸ்யம்! ஜோஸ்யம்!—வலது கையில் ஒரு வீர கங்கணம் அணிந்திருப்பார்.—

வே. உண்மையே! உண்மையே! எங்கே அவர்? எங்கு சென்ருர்? உனக்கெப்படியும் தெரியும், ஜகஜ்ஜாலா, உனக்கு நூறு பொன் தருகிறேன் சொல்லிவிடு.

ஜ. அவர் இருக்கிற இடமா?—இதென்ன கஷ்ட காலம்!—அது தெரியா தம்மணி!

வே. அதெல்லாம் உதவாது.— இவ்வளவு சொன்னவனுக்கு அது தெரியாம லிருக்குமா? ஜோஸ்யம் பார்த்துச் சொல்.

ஜ. ஓகோ! அம்மணி! எனக்கு ஜோஸ்யமும் தெரியாது, ஒன்றும் தெரியாது.

வே அதெல்லாம் உதவாது, பொய் பேசாதே.

ஜ. ஐஐயோ! எனக் கொன்றும் தெரியாதே.

வே உம் உம்! நீதான் அவரை எங்கேயோ அழைத்துக் கொண்டு போயிருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஒளித்து வைத்திருக்கவேண்டும்.

ஜ. இதென்ன பயித்தியமா யிருக்கிறது!

வே. நீ அவரை இப்பொழுது அழைத்து வாராவிட்டால் உன்னை விடமாட்டேன்.

ஜ. அம்மணி, என்னை விடா விட்டால் நா னெப்படி அவரை அழைத்து வருவது?

வே ஆம், ஆம், போய் அழைத்து வா, விரைவில்.

ஜ. ஆம், ஆம். இதோ விரைவில் அழைத்து வருகிறேன்— உம்முடைய பிதாவை!

[விரைந்து போகிறான், போகும் பொழுது படம் நழுவி கீழே விழுகிறது.]

வே. பிராணநாதர் வருவார்!—வருவார் விரைவில்!—வந்தால் என்ன சொல்வார் என்னிடம்?—நா னென்ன பேசுவது அவருடன்? எனக்கு நாணமா யிருக்கிறது! நான் மறைந்துக்கொள்ளலாமா?—மறைந்துகொண்டால் அவர் வந்தவுடன் நான் காணேனென்று போய்விட்டால்? அது உதவாது. நாம் பேசாதிருப்போம். அவராகப் பேசட்டும்.—இப்படித் திரும்பிக்கொண்டு தலை குனிந்து நிற்கிறேன். அவர் அருகில் வந்தவுடன் நாணத்தால் முகத்தை திருப்பிக்கொள்வேன்—அவர் தன் அழகிய கரத்தால் என் முகத்தை மெல்லத் திருப்புவார். நான் என் காதலனைக் கடைக் கண்ணாற் பார்ப்பேன். —அவர் எனக்கு முத்த மிடுவார்!—

பின்புறமாக பத்மினி மெல்ல வந்து நிற்கிறாள்.

ப. பிறகு?—பிறகு என்ன செய்வார்?

வே. உம்! போங்கள் அம்மா!

ப. ஆம், நான் போகவேண்டியதுதா னினி. நீதான் ஒரு பிராணநாதனைக் கண்டுபிடித்துவிட்டாயே!—

வே. என்ன அம்மா, நீங்களும் ஏளனம் செய்கிறீகள்?

ப. நான் ஏளனம் செய்யவில்லை. சமாசாரம் என்ன? ஏது இதற்குள் புத்தி மாறியது? யாரைப்பற்றி பேசிக்கொண் டிருந்தாய்? எந்த ராஜகுமாரன் உன் முகத்தைத் திருப்பி முத்தமிடப்போகின்றவர்?

வே. போங்கள் அம்மணி!

ப. இனி உதவுமா? கண்டுபிடித்துவிட்டேன்! எந்த ராஜ குமாரன்மீது காதல் கொண் டிருக்கிறாய்? சொல் என்

னிடம், நாணப்படாதே. எப்படியும் அவனுக்கே உன்னை மணம் புரிவிக்கிறேன்.

வே. அப்படி சத்தியம் செய்துகொடுங்கள்.

ப. அப்படியே ஆகட்டும். வேதவதி, நீ விவாகம் செய்து கொண்டால் போதுமென்று கோரிக்கொண் டிருக்கிறோமே உன் பிதாவும் நானும், இதற் கென்ன தடை கூறப்போகிறோம் நீயாகக் கேட்கும்பொழுது? எந்த ராஜகுமாரன்மீது காதல் கொண் டிருக்கிறாய்? என்னிடம் கூற வெட்கப்படுவானேன்?

வே. [பாஸ்கரன் படத்தை எடுத்துத் தன் தாயாரிடம் கொடுத்து] இதோ என் பிராணநாதர்!—

ப. கண்ணே, உன் அழகுக் கேற்ற அரசிளங் குமாரனையே வரித்தாய்! மிகவும் சந்தோஷம்! இதேது படம்? இது மற்றவைகளுட னிருக்க நான் கண்டதில்லையே! யார் இந்த ராஜகுமாரன் தெரியுமா உனக்கு?

வே. காஸ்மீர மன்னன் புதல்வன்—

ப. ஆ! ஆ! ஐயோ, வேதவதி!—காஸ்மீர மன்னன் புதல்வனா?

வே. ஆம்—அம்மா, நீங்கள் சத்தியம்செய்து கொடுத்திருப்பதை மறக்கலாகாது—

ப. ஐயோ! வேதவதி!

ராகம்—முகாரி

ஆகாத விடந்தன்னி லையோநீ காதல்கொண்டாய்
சாகாத சச்சரவுன் தந்தையவர் கொண்டுடையார்
போகாத விடந்தன்னிற் போயிடுமோ வுன்னிதய
சோகாதுன் மனந்தன்னை நுண்ணிடையே மாற்றுவையே.

வே. அம்மா, என்ன ஒன்றும் அறியாதவர்போல் பேசுகிறீரே! காதல் ஒரு புருஷன்மேற் கொண்டபின் கடவுள் வந்தாலும் மனம் மாறுமோ? அம்மா, என் னுயிரை

உமது கையில் ஒப்புவித்தேன், என் பிராணநாதருக் கென்னை விவாகஞ்செய்து கொடுத்தால் உயிர் வாழ் வேன். இல்லாவிடின் உயிர் துறப்பேன். இது நிச்சயம்!

ப. வேதவதி, ஐயோ! எனக் கொரு ஆட்சேபனையு மில்லை. ஆயினும் உன் பிதாவின் மனத்தை யார் திருப்புவது? அவரோ அந்த அரசிளங் குமாரன்மீது ஜன்மத்துவேஷம் வைத்து எப்படியாவது அவனைக் கொல்ல நிச்சயம் செய் திருக்கிறாரே!

வி, [உள்ளிருந்து] ஆ! அப்படியா சமாசாரம்!

வே அம்மா! அம்மா! பிதா வருகிறார் கோபமாய்! இந்த ஜகஜ்ஜாலன் ஏதாவது சொல்லிவிட்டானோ என்னவோ! அம்மா! நீர்தான் என்னைக் காப்பாற்றவேண்டும், என் னுயிர் உமது கையி லிருக்கிறது!

[பிரிந்து நிற்கிறார்கள்.]

மறுபடியும் விக்கிரமபாஹு வருகிறார்.

அவர் பின்னால் உருவிய கத்தியுடன் ஜகஜ்ஜாலன் வருகிறான்.

வி. எங்கே அப் பாதகன்? எங்கே அவன், ஜகஜ்ஜாலா?—

ஜ. இங்கேதான் வந்திருக்கவேண்டும்! நேராகக் கேளும் உமது மகளை, சமாசாரம் என்ன வென்று.

வி. வேதவதி! நடந்த சமாசாரம் என்ன, உண்மையைக் கூறு கிறாயா என்ன இப்பொழுது?

வே. அண்ணா, என்ன சமாசாரம்?

பு. பிராணநாதா, இதென்ன சாகசம்? நான் போய் மெல்லப் பேசி நமது குழந்தை மனத்தைத் திருப்பி வருகிறேன், சற்று வாராமலிரும், என்று சொல்லி வந்தேனே! இதற் குள்ளாக உம்மை யார் வரச்சொன்னது? இப்பொழுது தான் சற்று இணங்கி வந்தாள்—

வி. அதெல்லா மிருக்கட்டும், பாஸ்கரன் இங்கு வந்தது உண்மைதானே?

ப. யார்? யார்?

வே. யார் அம்மணி அது?

ஜ. யார் அம்மணி அது? ஐயோ பாபம்!

வி. வேதவதி! வாஸ்தவத்தைக் கூறு, காஸ்மீர மன்னன் புதல்வன் இங்கு வந்தானு?

வே. யார் அது காஸ்மீர மன்னன் புதல்வன்?—அம்மா! பிதா ஏன் என்னிடம் இவ்வாறு கோபமாய்ப் பேசுகிருர்? இதற்குத்தான் எனக்கு விவாகமே வேண்டாமென்றது. எனக்கு வேண்டாம் போங்கள்!

[ஒருபுறமாகப் போய் நிற்கிருள்.]

ப. பிராணநாதா! இதென்ன? இப்படித்தானே எல்லாவற்றையும் கெடுக்கிறீர்கள். அவள் சற்று முன்பாக நாம் சொல்லுகிறபடி விவாகஞ் செய்துகொள்வதாக இணங்கி வந்தாளே! இதற்குள் இங்கு வந்து ஏதோ கோபமாய்ப் பேசி அவள் மனத்தை மாற்றிவிட்டீரே! போம், பிராண நாதா. [ஒருபுறம் போய் நிற்கிருள்.]

வி. ஆனுல் பாஸ்கரன் இங்கு வரவில்லையா? ஜகஜ்ஜாலன் கூறினனே!—

ப. இங்காவது அவன் வருவதாவது? அந்தப் பயித்தியக்காரன் கூறியதை நீர் நம்புகிறீரே?

ஜ நானு பயித்தியக்காரன்!—

வே. அது யார் அண்ணு அந்த ராஜகுமாரன்? மற்ற தேசத்து ராஜகுமாரர்களை யெல்லாம்பற்றி என்னிடம் கூறினீரே, இவரைப்பற்றி ஒன்றும் கூறவில்லையே!—

வி. ஜகஜ்ஜாலா, என்னிடம் பொய்யா கூறினுய்?

ஜ பொய்யா! கொஞ்சம் பொறுங்கள். இதோ ராஜகுமாரி வைத்துக்கொண்டிருந்த அவர் படத்தைப் பார்த்துவிட்டு அப்புறம் சொல்லுங்கள்.

வி. எதோ? எதோ?

வே. அந்த ராஜகுமாரர் படமா ?—அம்மா, அதை யேன் நீங்கள் என்னிடம் காண்பிக்கவில்லை, நான் பார்க்கவேண்டும், எங்கே அது ?

ஜ. இங்குதா னிருந்தது ! எங்கே போயது ?

[தேடிப் பார்க்கிறான்.]

வி. வேதவதி, நீ அதைப் பார்க்க லாகாது, சற்று பொறு.

வே. ஏன் அண்ணா ?

வி. அப்புறம் சொல்கிறேன்.—ஜகஜ்ஜாலா, எங்கே அது ?

ஜ. இங்கேதா னிருந்தது. [தேடுகிறான்.]

வி. இங்குதா னிருந்தால் எங்கே போயிருக்கும் ? என்ன பயித்தியக்காரனா யிருக்கிறாய் !

ஜ. பயித்தியக்காரனா !—போதும் ! பட்டப் பெயர் ! உள்ளதைச் சொன்னதின் பலன் இது.

வே. அண்ணா, காஸ்மீர மன்னன் குமாரனுக்கா என்னை விவாகஞ் செய்துகொடுக்கப் போகிறீர்கள் ? ஐயோ ! எனக்கு அவர் வேண்டாம். எப்படி யிருப்பாரோ ? என்ன அவலட்சணமா யிருப்பாரோ ? என்ன புத்தி ஹீனரா யிருப்பாரோ ?—இதற்காகத்தான் நான் விவாகமே வேண்டாமென்று சொன்னது.

ஜ. அம்மா ! இப்படி யல்லவோ இருக்கவேண்டும் புத்தி ! மெச்சினேன் ! மெச்சினேன் !

வே. பாருங்கள் அண்ணா ! இந்தப் பயித்தியக்காரனும் என்னை ஏளனம் செய்கிறான் !—

ஜ. சரி ! தாங்களும் பயித்தியக்காரனென்று அழைத்துவிட்டீர்களே ! சரியாகிவிட்டது பாக்கி ! ஆனால் நீங்கள் அழைத்ததுதான் சரி ! நீங்கள்தானே என்னை பயித்தியக்கார னாக்கினீர்கள்.—

வி. போதும், நிறுத்து ஜகஜ்ஜாலா.—வேதவதி, நீ வருந்தாதே. அந்தப் பாஸ்கரனுக் குன்னை நான் ஒருகாலும் விவாகஞ்செய்து கொடுப்பதில்லை!—அதிருக்கட்டும் கண்ணே, சற்று முன்பாக உன் தாயாரிடம் நீ மணஞ்செய்து கொள்வதாக ஒப்புக்கொண்டது வாஸ்தவம்தானா?

வே. ஆம், நீங்கள் அவ்வளவு கேட்டபொழுது நான் மறுப்பது நியாயமாகுமா?

வி. நன்றாகக்கூறினாய், வேதவதி, இதுதான் நல்லபெண்ணுக் கடையாளம்.

ப. என் வயிற்றில் பிறந்தது நல்ல பெண்ணா இராது எப்படியிருக்கும்?

வி. சரிதான்.—வேதவதி, சீக்கிரம் ஐம்பத்தாறு தேசத்திலுமுள்ள அரசிளங் குமாரர்களை யெல்லாம் வரவழைக்கிறேன். அவர்களில் உன் மனதுக் கினிய மணாளனை நீ மணப்பாய்.

வே. அப்படி வேண்டாம், அண்ணா. எல்லா தேசத்து ராஜகுமாரர்களையும் வரவழைத்து எவனொருவன் உமது வில்லை வளைத்து நாம் ஏற்படுத்தும் சுல்கத்தை எய்கிறானோ அப்படிப்பட்ட ராஜகுமாரனுக்கே நான் மாலை சூட்டவேண்டும். சுத்தவீரனாகிய உமது பெண்ணாகப் பிறந்து எனக்கு ஒரு சுத்த வீரனையன்றி வேறொருவனையும் மணக்க இஷ்டமில்லை.

வி. சபாஷ்! நன்றாய்ச் சொன்னாய்.

ஜ. சபாஷ்! சபாஷ்! சமாசாரம் தெரிகிறது.

வி. உடனே சுயம்வரத்துக்கு நாள் குறித்து ஓலை அனுப்புகிறேன் எல்லா அரசருக்கும். வேதவதி, உன் புத்திசாலித்தனத்தை இப்பொழுதுதா னறிந்தேன். நான் வருகிறேன். [போகிறார்.]

ஜ. அம்மணி, காஸ்மீர மன்னன் புதல்வனுக்கும் ஓலை யனுப்பும்படி சொல்லவா?

ப. ஜகஜ்ஜாலா, போ, விளையாடாதே! மகாராஜாவிடம் கூறி தண்டிப்பேன் பிறகு!

ஜ. செய்வீர்கள்! செய்வீர்கள்!

ப. வேதவதி, நாம் போவோம் வா.

[வேதவதியும், பத்மினியும் போகிறார்கள்.]

ஜ. பெண்ணாகப் பிறந்தால் இப்படிப் பிறக்கவேண்டும். சுயம் வர தினத்தில் ஏதோ சூது நடக்கப்போகிறது! பார்ப்போம். [போகிறான்.]

இரண்டாம் அங்கம் முடிகிறது.



# மூன்றாவது அங்கம்.

---

இடம்—அரசனுடைய கொலு மண்டபம். காலம்—பகல்.

அநேகம் அரசர்கள் உட்கார்ந்திருக்கின்றனர்.

ஒருபுறம் மந்திரியும் ஜகஜ்ஜாலனும் வருகிற அரசர்களை யெல்லாம் மரியாதைசெய்து அழைத்துக்கொண்டுபோய் ஆசனங்களில் உட்காரவைக்கின்றனர்.

அங்கதேசத்து அரசன் வருகிறான்.

ஜ. வரவேணும்! வரவேணும்! தங்கள் வரவுக்காகத்தான் எல்லா அரசர்களும் எதிர்பார்த்திருக்கிறார்கள்!

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறான்.]

[ஒரு புறம்] எல்லோருக்கும் முன்னே வந்துவிடும்!

வங்கத்து மன்னன் வருகிறான்.

வரணும்! வரணும்! எங்கே தாங்கள் வராதிருக்கிறீர்களோ என்று பயந்திருந்தேன்!

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறான்.]

[ஒரு புறம்] மந்திரி, அழையா வீட்டிற்கு நுழையாச் சம்பந்தி!

பாண்டிய மன்னன் வருகிறான்.

ஆஹாஹா! வரணும்! தாங்கள் வராமல் சபைக்கு ஓர் அழகில்லை.

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறான்.]

[ஒரு புறம்] திருஷ்டி பரிகாரம்!

சிங்கள அரசன் வருகிறான்.

ஓகோகோ! வரணும்! வரணும்! எங்கே தங்களுக்கனுப்பிய ஓலை சேராதிருக்கிறதோ என்று மந்திரி

யவர்கள் இரண்டு ஓலை யனுப்பினர் !

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறன்.]

[ஒரு புறம்] மந்திரி, இவருக்கு மண ஓலையே அனுப்பவில் லையே, இவரை யார் வரச் சொன்னது ?

சோழநாட்டு மன்னன் வருகிறன்.'

வரணும் ! வரணும் ! தங்களைத்தான் நான் கோரிக்கொண் டிருந்தேன் ! தாங்கள் வராது சபை நிறைய வில்லை. தாங் கள் உட்காரவேணும், சபை நிறைய வேணும் !

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறன்.]

[ஒரு புறம்] மந்திரி, ஆசனம் உடையவில்லையே ஜாக் கிரதை !

சேரநாட்டு அரசன் வருகிறன்.

ஆஹா ! வரணும் ! வரணும் ! ஏது இவ்வளவு நேரம் ?— இந்த மோதிரம் கொஞ்சம் மறைந்திருக்கிறது—ஆ ! சரி!

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறன்.]

[ஒரு புறம்] மந்திரி, இவர் வில்லை வளைக்க வந்தாரோ, பல்லை இளிக்க வந்தாரோ ?

கேகய அரசன் வருகிறன்.

அடடா !—வரணும் ! வரணும் ! முதலில் அடையாளமே தெரியவில்லை ! நெடு நாளாச்சுது பார்த்து ! எங்கே, தங் களுக்கு பெரிய ராஜ்யம், எவ்வளவு விவகாரம், என்ன சமாசாரம் !

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறன்.]

[ஒரு புறம்] மந்திரி, இவர் யார் ஆசாமி தெரியவில்லை !

பாஸ்கரன் வயோதிகஞன அரசன்போல் வேஷம் பூண்டு வருகிறன்.

ஹா ! ஹா ! ஹா ! வரணும் ! வரணும் ! தங்களைப் பார்த் தால்தான் கலியாண மாப்பிள்ளைபோ லிருக்கிறது ! சந்

தேகமில்லை, மண மாலை தங்களுடையதுதான்!

[மந்திரி அழைத்துக் கொண்டு போய் உட்காரவைக்கிறான்.]

[ஒரு புறம்] மந்திரி, இந்த கிழத்திற்கும் கலியாண ஆசை விடவில்லை பார்த்தீரா!

[மற்ற அரசர்களையும் இங்ஙனமே அழைத்து மரியாதை செய்கின்றனர்.]

இதற்குள்ளாக பத்மினியும், வேதவதியும் தாதியர் புடைசூழ உப்பரிகையின்மீது வருகின்றனர்.

வே. அம்மா, என்னிஷ்ட தேவதைதான் என் பங்கிலிருந்து என் பிராணநாதரை இச் சபைக்குக் கொண்டுவந்து விட வேண்டும்.

ப. அவருக்கு நீ அனுப்பிய ஓலை போய்ச் சேர்ந்ததோ இல்லையோ?

வே. அதுதானே தெரியாது தவிக்கிறேன்.

ப. ஒருவேளை சுயம்வர மண்டபத்தில் மற்ற அரசர்களுடன் எங்காவது உட்கார்ந்திருக்கிறாரோ பார்ப்போம். ஆயினும் வேதவதி, அவர் தன் நிஜ ரூபத்துடன் வந்தால் மஹாராஜா பார்ப்பாராயின் நம தெண்ணமெல்லாம் கெடுமே, அதற் கென்ன செய்வது?

வே. அதற்காகத்தான் மாறு வேஷம் பூண்டு வரும்படி எழுதியிருக்கிறேன்.

ப. ஆனல் நாம் தேடிப் பார்ப்பதில் என்ன பிரயோஜனம்? மாறு வேஷம் பூண்டுவந்தால் நாம் எப்படி அறியக்கூடும்?

வே. அம்மா என் பிராணநாதர் என்ன மாறு வேஷத்தி லிருந்தபோதிலும் என் காதலால் கண்டுபிடித்துவிடுவேன் நான்.

ப. ஆனல் நீதான் தேடிப்பார்.

வே. ஐயோ! எங்கு தேடியும் காணேனே!

ப. அதோ பார் வேதவதி, உயர்ந்த சிம்மாசனத்தில் வலது புறமாய் உட்கார்ந்திருக்கிறாரே, அவரா யிருக்குமா?

வே. அல்ல, அம்மணி.

ப. அல்லது, இந்தப் புறம், பீதாம்பரக் கச்சை யணிந்திருக்கிறாரே, அவரா யிருக்குமா?

வே. அல்ல, அம்மணி.

ப. மந்திரியுடன் நகைத்தவண்ணமாய்ப் பேசிக்கொண் டிருக்கிறாரே; அந்த ராஜகுமாரனா யிருக்குமா?

வே. இராது அம்மணி.

ப. காதில் மரகதமணி துலங்க கவசத்துடன் வந்திருக்கிறாரே, அந்த வீரனா யிருக்குமா ஒரு வேளை?

வே. உம்—உம்—!

ப. இதோ தாம்பூல மணிந்த வண்ணம் தன் தோழனுடன் பேசிக்கொண் டிருக்கிறவர் உன் பிராணநாதர் ஜாடையா யிருக்கிறதுபோ லிருக்கிறதே.

வே. இல்லை, அம்மணி.

ப. பிறகு யார்தான் சொல். யாரைக் கேட்டாலும் இல்லை யென்கிறாய்—அதோ நரைத்த கிழம் ஒன்று வந்திருக்கிறதே அதுவா?

வே. அம்மணி, என்னை ஏளனம் செய்யாதீர்கள்! அவர்போல் தான் இருக்கிறது!—

ப. சிச்சி! வேதவதி, விளையாடுகிறாயா என்ன? என்னதான் வேஷம் தரித்தாலும் வயதுகூட மாறுமோ?—ஒருவேளை அவருக்கு போய்ச் சேர்ந்திராது மண ஓலை, அல்லது சேர்ந்தும் வராதிருக்கிறாரோ?—ஒருவேளை அவர் வாரா திருந்தால் பிறகு என் செய்வாய் நீ?

வே. நானென்ன செய்வது?—சும்மா இருப்பது.

ப. சுயம்வரம் எப்படிப் போவது?

வே. அவரை யன்றி நாம் ஏற்படுத்திய சுல்கத்தை யெய்பவர் ஒருவரு மில்லை இவ்வுலகில். ஆகவே நான் பயப்பட வேண்டியதில்லை அம்மா.

ஜ. பராக்! ராஜாதி ராஜன் விக்கிரமபாஹு மஹாராஜா கொலுவுக்கு வருகிறார்! பராக்!

பரிவாரங்கள் புடைசூழ **விக்கிரமபாஹு** வருகிறார்.

வி. [சிம்மாசனத்தில் வீற்றிருந்து] மந்திரி, சபைக்கு எல்லா அரசர்களும் வந்துவிட்டார்களா?

ஜ. அங்க, வங்க, கலிங்க, குலிங்க, ஒட்டிய, கன்னட, காந்தார, காம்போஜ, கிராட, குடக, குந்தல, குலிந்த, குர்ஜர, கேகய, கேரள, கொங்கண, கொல்ல, கோசல, சாளுவ, சிங்கள, சிந்து, சீன, சூரசேன, சோழ, பாண்டிய, சோனக, திராவிட, துளுவ, நிடத, நேபாள, பாஞ்சால, பப்பர, மல்லவ, புலிந்த, மகத, மச்ச, மகராஷ்டிர, சௌராஷ்டிர, மலையாள, மறவ, யுகந்தர, விதர்ப்ப, வங்கள, கர்னாடக, அருண, யவன, ஆந்திர, நட்டிய, சவ்வீர, அயோத்திய, கருச, இலாட, காச முதலாகிய ஐம்பத்தாறு தேசத்து மன்னர்களும் வந்திருக்கிறார்கள் மஹாராஜா!

வி. சந்தோஷம்.—ராஜாதி ராஜர்களே! இனி தாமதஞ் செய்வானேன்? யார் யாருக்கு என் கன்னிகையாகிய வேதவதியை மணக்கவேண்டுமென்று விருப்ப மிருக்கிறதோ அவர்களெல்லாம்—

எல்லோரும். [எழுந்திருந்து] ஆ! ஆ!—

வி. அவர்களெல்லாம் ஒவ்வொருவராக வந்து இதோ இப்பாரிய வில்லை வளைத்து, நாணேற்றி, அந்தரத்தில் பறக்கும் சக்கிரத்தை வீழ்த்த முயலுங்கள்; யாரொருவர் அங்ஙனம் செய்கிறாரோ அவருக்கு என் மகள் மணமாலை சூட்டுவாள்.

எல்லோரும். ஏ !—

வி. தாமதம் வேண்டாம், ஆரம்பிக்கலாம்—

[ஒவ்வொரு அரசனும் தன் பக்கத்திலிருக்கும் அரசனைப் பார்த்து]

எல்லோரும். ஏன், தாங்கள் போய்ப் பார்க்கிறதுதானே? தாங்கள் போகலாம்! தாங்களே! [உட்கார்ந்துவிடுகிறார்கள்.]

ஜ. அடடா! என்ன! எல்லாம் சும்மா உட்கார்ந்துகொண்டு இருக்குதுகள். கொஞ்சம் முன்னே எல்லோரும் ஒன்றாய் எழுந்த வேகத்தைப் பார்த்துப் பயந்தேன், மஹாராஜா இத்தனை பெயருக்கும் பெண் எங்கு சம்பாதிப்பதென்று!— அடடா! இவ்வளவுதானா? சமாசாரம் கேட்டவுடன் கம்மென்று உட்கார்ந்துவிட்டதுகள்! சரிதான்!—மந்திரி, இதெல்லாம் உதவாது! நாம் சும்மா இருந்தால் இவர்களும் சும்மா இருப்பார்கள். நாம் போய் ஒவ்வொருவராய்க் கேட்டுப் பார்ப்போம், வாரும்.

கு-ம. ஹா— [சரேலென் றெழுந்திருக்கிறார்.]

ஜ. ஆஹா, எழுந்தாரையா சிங்கம்!—அடடா! எங்கே போகிறார்? [அவரைத் தடுக்கிறான்.]

கு-ம. அவசரமாக வெளியில் போகவேண்டும், மறுபடியும் வருகிறேன். [போகிறான்.]

ஜ. மறுபடியும் வருவதே தினி! முதலிலேயே மிஞ்சிக்கொண்டார்.—மந்திரி, இன்னும் தாமதித்தால் எல்லோரும் போய்விடுவார்கள், வாரும் கேட்போம் இதோ, அங்க தேசாதிபதி!

ராகம்— ஆநந்த பைரவி.

ம. அங்க தேசாதிப அட்டியேனினி
சிங்கம்போலவே நீர் சீறி எழுந்திரும்

அ-ம. நங்கள் சொல்லுவார், நான்முன ரெழுந்திட்டால்
நாடுவீர் பாரிய நாடாளு மன்னரை.

மந்திரி, என்ன தெரியாமல் பேசுகிறீர்! நான் முன்னெழுந்தால் பெரிய ராஜாக்களை யெல்லாம் அவமானம் செய்ததாகும்! பெரிய ராஜாக்களெல்லா மிருக்கிறார்கள், அவர்களைப் போய்க் கேளுமையா முன்பு! நான் சிற்றரசன், மரியாதை பார்க்கத் தேவையில்லையா?

ஜ. ஆமாம்! ஆமாம்!—[ஒரு புறம்] தப்பித்துக்கொள்ள மரியாதை யெல்லாம் வருகிறது!—வாரும் போவோம், வங்கத்து மன்னனிடம்.

ராகம்—பைரவி.

ம. வங்கத்து மன்னனே, வளைத்திடும் வில்லினை
வஞ்சியை மணந்திடும், அஞ்சாமலே நீரும்.

வ-ம. பங்கப்படுத்தினீர், பாராளு மன்னர்முன்
அங்கத்தரசனை, அழைப்பதோ என்முன்.

மந்திரி, இவ்வளவுதானா உமது புத்தி? இத்தனை அரசருக்கு முன்பாக என்னைப் பங்கப்படுத்தினீரே! அங்கத்துச் சிற்றரசனை முன்பு அழைத்துவிட்டு பிறகு ராஜாதிராஜனான என்னை அழைப்பதா? இப்பொழுதே இவ்வளவு மரியாதை செய்தால் பிறகு உம தாசன் மகளை மணந்தபின் என்ன மரியாதை செய்வீரோ தெரியாது! வேண்டாம் நமக்கு இந்த சம்பந்தம்!

ஜ. அடடா! என்ன கோபம்! என்ன கோபம்! என்ன கோபம்! இதுவும் ஒரு விதம்தான்!—மந்திரி, பார்த்தீரா உமது தப்பு!—ஜாக்கிரதை!— இதோ சிங்கள மன்னன்! இவர்தான் சரி! இவரைக் கேளும்.

ராகம்—சங்கராபரணம்.

ம. சிங்கள மன்னனே, எங்கள் குறைதீர்த்து
மங்கையை மணந்துநீர், மகிழ்ந்திடுவீரே,

சி-ம. நங்கையவள் தானும், தங்கையெனக் காவாள்
நானிலம் நகைத்திட, நானே மணப்பதோ.

மந்திரி, இதுவரையில் உம்மைப் புத்திசாலியென்று நினைத்திருந்தேன்! இவ்வளவுதானு உமது புத்தி? வேதவதி அம்மாள் எனக் கென்னவேண்டும் தெரியுமா? தங்கை முறையாயிற்றே! நான் தங்கையையா மணப்பது? என்ன அறிவீனனு யிருக்கிறீர்?

ஜ. எப்படி அரசே, தங்கை?

சி-ம. என் முப்பாட்டனுருடைய மாமனுர் தம்பியின் பேரப்பிள்ளைக்கு—

ஜ. போதும்! போதும்! தெரிகிறது ஸ்பஷ்ட்டமாய்! அப்படியிருக்க அவரைக் கேட்கலாமா? மந்திரி!—வாரும் கேகய மன்னனிடம் போவோம். ஏதோ யோசித்துக்கொண்டிருக்கிருர்—[ஒரு புறம்] என்ன சாக்கு சொல்லலாமென்று!—

ராகம்—கல்யாணி.

ம. கேகய மன்னனே, கீர்த்தி பெறவே இன்று
ஏகுகிநீர் சுல்கத்தை, எய்து மணப்பீரே.

கே-ம. போகப் புறப்பட, பூனை எதிர்வந்த
தாகையினுலே, ஆசைப்படேனுனே!

மந்திரி, ஆக்ஷேபனை யொன்று மில்லை. இந்த சுல்க மல்ல, இதைப் பார்க்கினும் கடினமான சுல்க மெய்தல் எனக்கொரு கஷ்டமல்ல —

ஜ. ஆனல் எழுந்திருக்கிறதுதானே உடனே?

கே-ம. ஆனல், நான் அரண்மனையை விட்டுப் புறப்பட்ட பொழுது பூனையொன்று குறுக்கே வந்தது. அந்த சகுனம்பற்றி இதில் பிரவேசிக்க இஷ்ட மில்லை.

ஜ. சரிதான்.—மந்திரி, அப்பொழுதே நான் சொல்லவில்லை. இவர் நன்ருய் யோசித்துச் சொன்னுர்—சாக்கு!—வாரும் இதோ சோழராஜன்.

ராகம்—சாவேரி.

ம. சோழதேசாதிப, சொன்னபடி செய்தே
சொர்ணக் கொடியாளை, சுகமாய் மணந்திடும்.

சோ-ம. மந்திரி, முறை சரியாயில்லை, அதுதான் யோசிக்கிறேன்.

ஜ ஐ ஐயோ! அது உதவாது. அந்தச் சாக்கு அப்பொழுதே இன்னொருவர் சொல்லிவிட்டார்! வேறே ஏதாவது சொல்லுங்கள்.

சோ-ம. நான் சொல்லவந்ததை முழுவதும் கேட்கவில்லையே,
காளைக் கருங் குழலாள், காக்குமென் தாய்போல்
கண்ணிற் புலப்பட்டாள், கடிந்தனன் மணத்தையே.

மந்திரி, சற்று முன்பாக மாடிமீது வந்தபொழுது திரும்பிப் பார்த்தேன் ராஜகுமாரியை. நான் பார்த்தபொழுது என் தாயின் ரூபம்போல் தோற்றியது! அது முதல் அம் மாதின் மீது மனம் செல்லவில்லை!

ஜ. நன்றாய்த் திருப்பினீர்! தமது புத்தியே புத்தி!—இதோ சேர மஹாராஜன்!—ஐயா, ஐயா! முகத்தைத் திருப்பிக்கொள்ளாதீர்! மந்திரி விடுவாரா?

ராகம்—மோஹனை.

ம. சேரனே நீர் பெரும், சிங்கம்போல எழுந்து
சீக்கிரமாய் மணம், செய்யவே வாரும்.

சே-ம. மந்திரி, சமாசாரம் தெரியாதோ!
கோர சம்சாரத்தைக், கோணியே துறவறம்
கொள்ள நான் எண்ணினேன், குமரியை வேண்டேன்.

சமாசாரம் தெரியாமல் நீர் எப்படிக் கேட்கிறீர்! நில்லாதீர், போம். நான் சம்சாரத்தையே விட்டுவிடத் தீர்மானித்திருக்கிறேன்!

ஜ. ஐஐயோ! எங்கள் ராஜ குமாரிக்காக நீங்கள் துறவறம் ஏன் கொள்ளவேண்டும்? நாங்கள் உங்களைக் கேட்க

வில்லை. இல்லறத்திலேயே சுகமா யிரும்.— இன்னும் யார் பாக்கி ?—ஆ! அதோ ஒரு அரசர் மிகுதியா யிருக்கிறார் ! பல்லவ ராஜன்—

ராகம்—காம்போதி.

ம. பாரெங்கும் போற்றிடும் பல்லவ ராஜனே
பாவையை மணந்திடப் பாரும் பராக்கிரமம்.

ப-ம. தார மிரண்டுண்டு தனியாகவேதான்
தங்கினேன் இங்கு தயவுநீர் செய்யும்.

மந்திரி, இங்கே வாரும், ஒரு சமாசாரம். எனக்கு இரண்டு தாரங்க ளிருக்கின்றன. அந்தக் கஷ்டம் பொறுக்க முடியாமல் தனியா யிருக்க நான் இங்கு வந்தேனே யொழிய இன்னொரு விவாகம் செய்துகொள்ள வந்தவ னல்ல. இரண்டே போதும், மூன்றுவ தொன்று வேண்டுமா ?—என்னை மன்னிக்கவேண்டும்.

ஜ. மந்திரி, ரகசியம் வேறு இதில் ?— சரி! இனி யாரைக் கேட்பது! எல்லோரும் ஆயது—ஆ !—அதோ இருக்கிறார் பாண்டிய ராஜன் !—

ராகம்—கானடா.

ம. பார் புகழ் பாண்டிய, ராஜனே நீர்தானும்
பாணத்தை எய்தெங்கள், பர்வையை மணந்திடும்,

பா-ம. மந்திரி !

கார்முகம் போலவே கடிதினி லெய்வேன்
கை சுளிக்கிக்கொண்ட, காரணமென் செய்வேன் !

இதென்ன எனக்கு ஒரு லட்சியமா ? ஆனாலும் இப்பொழுது என் சௌரியத்தைக் காட்ட முடியாம லிருக்கிறது.

ஜ. ஏன் ? ஏன் ?

பா-ம. என் கை பெரு விரல் சுளுக்கிக்கொண் டிருக்கிறது, ஆகவே வில்லை வளைப்பது அசாத்தியம் !

ஜ. துதுது! அடடா! என்ன கஷ்டம்! என்ன கஷ்டம்! உம்—மந்திரி, இன்னும் யாராவது மிருந்திருக்கிறார்களா பார்ப்போம்— ஆ!— அதோ ஒருவ ரிருக்கிறார்!— என்ன தூங்கிக்கொண் டிருக்கிறார்.—ஐயா, மலையாள மன்னனே! தூங்கினால் விட்டுவிடுவோமென்று பார்த் தீர்போ லிருக்கிறது! அது உதவுமா? எழுந்திரும், நீர் தான் சரி!

ராகம்—பூபாளம்.

ம. மலையாள பூபாலா, மாலையிட்டிட நீர்
மண மகனாகுவீர், மகிழ்ந்தே எழுந்திரும்

ம-ம மந்திரி, இதோ — [எழுந்திருக்கிறான்.]

ஜ. அப்பா! எழுந்தாரையா!—ஹா!

ம-ம. மந்திரி!—

[ஒருபுறமாக அவனை அழைத்துக் கொண்டுபோய்]

விலையாக வாங்கினேன், வேஷ மிதுவாகும்.
வேடிக்கைப் பார்க்கவே, வந்தேனன் மன்னியும்.

நான் மலையாள மன்ன னல்ல இந்தராஜா உடை இரவல் வாங்கினேன். இங்கே வேடிக்கை பார்க்க வந்தேன்— நம்மை இழுத்து விடாதேயும் நடுச் சபையில். நான் இதை மறக்க மாட்டேன்.

ஜ மந்திரி, என்ன கொடுத்தார் உமக்கு? எனக்குப் பாதி அதில்—பிறகு—

வி. மந்திரி, என்ன தாமதம் இன்னும்?

ஜ வாரும் ஐயா, இன்னும் யாராவது மிருந்து இருக்கிறார் களா பார்ப்போம்! எங்காவது ஒளித்துக்கொண் டிருப் பார்கள். ஆ! அதோ! ஒரு ராஜா! காம்பிலி மன்னன்!

ராகம்—அடாணா.

ம. காம்பிலி மன்னனே, கடிதினில் எழுந்திரும்
காளையைப்போல் வென்று, கன்னியை மணந்திடும்.

கா-ம. ஆஹா! அதற் கென்ன தடை! இதோ!

ஜ. அப்படி! அப்படி! ஆண் சிங்கம் தாமே!—அவரை யென்ன கேட்கிறீர்? என்ன சாக்கு சொல்லலா மென்று?—

[காம்பிலி மன்னன் பக்கத்தி லிருக்கும் அரசன் காதில் ஏதோ சொல்லிவிட்டுப் போக அவன் போய் வில்லை எடுத்த வுடன் பக்கத்து அரசன் தும்பு கிறான்.]

கா-ம. சீ!

தும்பின துற்சகுன மில்லாவிடி னுன்
துண்டித்திருப்பேன் துங்க வில்லதனை.

மந்திரி, என்ன போம் துற்சகுனம்! எடுக்கப் போகும் பொழுது தும்பினுல்! இந்நேரம் அந்த வில்லை ஸ்ரீராமர் முறித்தாற்போல் முறித்திருப்பேன்!

ஜ அடடா! கேட்பானேன்!— அதுதான் கேட்டுக்கொண்டு போனுர் பக்கத்திலேயே—தும்பும்படி யாக. மந்திரி, இவர் ராமர்தான்.—அனுல் அவர் ஸ்ரீராமர், இவர் என்ன ராமர்? ஐயோ சாமி! இப்படி இருக்குது உலகம்!—மந்திரி, மந்திரி! வாரும், வாரும்! அதோ ஒரு ராஜா நழுவுகிருர்!

ம. இதோ! இதோ வந்தேன்!

ராகம்—பியாகடை.

சாளுவ மன்னனே, சார்ந்தோ மும்மிடம்
சங்கையுமக்கேன், சடுதியில் எழுந்திரும்.

சா-ம. அதற்காகத்தானே எழுந்தேன்! இதோ க்ஷணம்!

ஜ. அரசே, கொஞ்சம் பொறுங்கள்!—ராஜாதி ராஜர்களே ஒரு மனு! கொஞ்சம் நேரம் யாரும் தும்பாமல் இருக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். இல்லாவிட்டால் இவருக்கொரு உபகாரி வந்தால், பிறகு என்ன சொல்வது!—வாருமையா இனி!

சா-ம. மந்திரி,—ஹா !

[சாளுவமன்னன் தடுக்கி வீழ்ந்தது போல் பாசாங்கு செய்கிருன்.]

கால்கள் முறிந்தன, கன்னிகை வேண்டாம்
கற்றநற் பண்டிதரைக் கடிதினிற் றருவியும்.

ஐஐயோ! உங்கள் பெண்ணும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். கால் போச்சுதே! முன்பு வயித்தியரை அழைப்பியும்.

ஜ. ஏ !

சா-ம. எல்லாம் இவனுல் வந்தது !—நான் புறப்பட்ட உடன் தடைப்படுத்தினுயே! அதுதான் துற் சகுனம்!—

ஜ. சரி! என்பேரிலேயே திரும்பினீர்களா ? நல்லது !-மந்திரி, ஏன் சும்மா இருக்கிறீர்கள்.—வயித்தியனுக் கனுப்பியுமே —[ஒரு புறம்] கூட நான்கு ஆட்களேயும் அழைப்பியும்!— மந்திரி, இனி என்ன செய்வது, ஒரு ராஜாவாவது பாக்கி யில்லை! எங்கு சுற்றிப் பார்த்தும் காணேம்!— ஆஹா ! அதோ விதர்ப்பத்து வேந்தர் !—மந்திரி, இவரைப்போல் ஒருவரும் கிடையாது. வீராதிவீரன்! சூராதிசூரன்! தீராதிதீரன்! ராஜாதிராஜன்! என்ன, மற்றவர்களேப் போல் சாக்கு சொல்லுவார் என்று எண்ணுகிறீரா என்ன ? அதெல்லா மில்லை நான் உத்தரவாதம்.

ராகம்—ஆபோகி

ம. வில்லை வளேத்திட, விதர்ப்பத்து வேந்தே
வேகமாய் எழுந்திரும் வீரனும் நீரே.

வி-ம. ஆஹா! சந்தேகமென்ன, இதோ !

ஜ. பார்த்தீரா மந்திரி, புறப்பட்டுதையா சிங்கக் குட்டி !

வி-ம. [வில்லருகிற் போய்] மந்திரி, இதென்ன இது ? இதைப் பார்க்கவில்லை நான்.

வில்லது முறிந்திட்டால் வெர்துயர் சூழும்
விண்டுயின் வில்லது வேண்டாம் நமக்கே.

மந்திரி, என் முகத்தை பார்த்தீரா? என்ன இருக்கிறது? நான் வைஷ்ணவன் என்று தெரியாதா உமக்கு? இந்த வில்லைப் பாரும். இது விஷ்ணுவின் வில்! அதோ பாரும் குறி! இதை நான் எடுத்து வளைத்தால் ஒரு வேளை முறிந்துபோனால் யார் உத்தரவாதம், அந்தப் பாபம் யாரைச் சேர்வது?

ஜ. ஐஐயோ! அப்படியா சமாசாரம்!— நான் உத்தரவாதம் விளையும்.

வி-ம. அது உதவாது! யார் சொன்னாலும் அந்தப் பாபத்திற்கு உடன்படமாட்டேன்.

[தன் ஆசனத்தில்போய் உட்காருகிறான்.]

ஜ. இவ்வளவுதானா! [ஒரு புறம்] போய் உட்கார்ந்துதையா பூனைக்குட்டி! மந்திரி, இவர்தான் நாமம் போட்டார்! இனி யாராவது சைவ மிருக்கிறதா பார்ப்போம்!—ஒருவரையுங் காணோம். அதோதோதோ!—மகதத்து மன்னன், கொடிய சைவம்!

ராகம்—கீரவாணி.

ம. மாரனை நிகர்ந்திடும், மகதத்து மன்னனே
மலையாது நீரும், மணஞ்செய்யப் பாரும்.

ம-ம. ஆகா!

ஜ. இந்த 'ஆகா'வி லெல்லாம் ஏமாறக்கூடாது, அங்கே போய் 'ஆகா' து என்று முடித்தால்!

ம-ம. மந்திரி! இப்படி வாரும், இதென்ன இது?

ஜ. நாமம்.

ம-ம. நான் யார் தெரியாது உமக்கு?
வீரசைவனானிவ், விண்டுவின் வில்லினை
தீண்டலுமாகாது, தெண்ட முமக்கே.

வீர சைவன் நான். இந்த வைஷ்ணவ வில்லைத் தொட்டாலும் பாபம்! வேண்டாமையா! உமக்கொரு கும்பிடு.

உம தாசனுக் கொரு கும்பிடு. வேதவதி யம்மாளுக் கொரு கும்பிடு,

ஜ. சரி! இவருக் கிப்படி திரும்பியதோ! அவருக் கப்படி! இருவருக்கிப்படி! இனி என்ன செய்வது! கடைசியில் நாமத்தில் முடிந்தது வேலை! இன்னும் யாரைக் கேட்பது? மந்திரி.

வி. மந்திரி, என்ன தாமதம்? எந்த வீரனானாலும் சரி. வந்து வில்லை வளைத்திடச் சொல்லும்.

ஜ. ஆனல் மந்திரி, இந்த கர்நாடக நபாபு ஒருவர் வந்திருக்கிறாரே அவரைக் கேட்டுப் பார்ப்போம்! வேறே யாரும் பாக்கி யில்லை.

ராகம்—தேசிகதோடி.

ம. வில்லை வளைத்திட்டு, விவாகஞ் செய்திடவே
வேகமாய் நவாபே, விஜயஞ் செய்யுமே.

க-ந. கியா சொல்ரான்?

ஜ. அடடா மந்திரி இவரோடு பேச உமக்குத் தெரியாது, நான் அழைக்கிறேன்.

வில்லுகி வளைச்சி, கண்ணாலம் பண்ணிக்க
வேகம்கி நபாபு, ஜல்திஆவ் இப்போ.

க-ந. அரே அரே!
கல்லாணம் சொல்ரா, சண்டகி போடராம்?
கபர்தார்! சாம்னே நிக்காதே ஜாவ் ஜாவ்.

[ஜகஜ்ஜாலனை அடிக்கிறான்.]

ஜ. மந்திரி, இந்த உத்தியோகம் நமக்கு வேண்டாமையா! போதும் பட்டபாடு! இனி நீராகக் கேட்டுக்கொள்ளும் யாராவது பாக்கி யிருந்தால்!

[மூலையில் போய் உட்காருகிறான்.]

வி. மந்திரி, இன்னும் என்ன ஆலஸ்யம்?—என்ன, இத்தனை பெரிய சபையில் ஒரு க்ஷத்ரியனாவது இல்லையா இவ் வில்

லை வளைத்து இந்த லட்சியத்தை எய்யும்படியான சூரன் ! ஓ !

பா. மஹாராஜா—யாராயிருந்தாலும் உதவுமா ?

வி. யாரா யிருந்தாலும் சரி ! - க்ஷத்ரியனுகமாத்திர மிருக்க வேண்டும். வயோதிகனுனுலும் சரி, எவனுயிருந்தாலும் சரி !

பா. அப்பா, என்னைப் பிடித்து அழைத்துக்கொண்டுபோய் விடு வில்லிடம் !—

மற்ற அரசர்கள். ஆஹாஹா ! இந்தக் கிழம் என்ன செய்யப் போகிறது ! [நகைக்கின்றனர்.]

ஜ. ஐயா ! என்னை மன்னிக்கவேண்டும். தலையெல்லாம் நரைத்துவிட்டதே, தமக்கிது என்னத்திற்கு என்று அழைக்காமல் விட்டுவிட்டேன் ! ஆனுல் மற்ற ராஜாக்கள் செய்தது தாம் செய்வது கடின மல்ல.—வாரும் ! நீர் என்ன போக்கு சொல்லப் போகிறீர் ?

[மெல்ல வில் லருகில் அழைத்துச் செல்ல, பாஸ்கரன் வில்லை எடுத்து நாணேற்றி குறியை அடிக்கிருன். மற்ற அரசர்களெல்லாம் ஆச்சரியப்படுகின்றனர்.]

மற்ற அரசர்கள். ஆமாம், இவன் யார் ? க்ஷத்ரியனல்லவே ! முகத்தைப் பார்த்தால் தெரியாதா !

பா. [தன் வேஷத்தைக் களைந்தெறிந்து] என்ன சொன்னீர் ! அரசப் பதர்களே ! நான் க்ஷத்ரியனு அல்லவா வென்று அரை க்ஷணத்தில் காட்டுகிறேன் ! எடுங்கள் உங்கள் ஆயுதங்களை !

[பத்மினி பின் வர, வேதவதி விரைந்து வந்து தன் கரத்திலிருந்த மாலையை அவன் கழுத்தில் சூட்டுகிருள்.]

மற்ற அரசர்கள். பாஸ்கரன் ! பாஸ்கரன் !

வி. [சிம்மாசனம் விட்டெழுந்து] ஆ! பாஸ்கரா! மோசம் செய்தாயா இப்படி! இதோ உன்னைக் கொன்று அன்று செய்த சபதத்தை நிறைவேற்றுகிறேன்.

[வாளை உருவுகிறான்.]

பா. ஹா-ம்! என்னையா? பாரும் உமது சாமர்த்தியத்தை!

வே. பிராணநாதா! பிராணநாதா! வேண்டாம்! வேண்டாம்! சமாதானமாய்ப் போம்! சமாதானமாய்ப் போம்!

[பாஸ்கரனைத் தடுக்கிறாள்.]

ப. நாதா! நாதா! இது நியாயமன்று! நியாயமன்று!

[விக்கிரமபாஹுவைத் தடுக்கிறாள்.]

வி. பத்மினி ஒதுங்கு சற்று!

பா. கண்ணே, சற்று ஒதுங்கியிரு,—ஒன்றும் அஞ்சவேண்டாம் நீ!

வே. ஐயோ! பிராணநாதா! என் தந்தை உம்மை தன் மந்திர பலத்தினால் கொன்றுவிடுவார், கொன்றுவிடுவார்!

வி. வேதவதி! ஒதுங்கு. மறைக்காதே அப் பாதகனை!

வே. நான் செய்யேன்! கொல்வதானால் எங்களிருவரையும் இப்படியே கொன்றுவிடும்! கொன்றுவிடும்! நான் இவ்விடம் விட்டுப் பெயரேன்!

வி. வேதவதி! நீ என் பெண்ணாயின் இப் பாதகனை காப்பாற்றாதே!

வே. ஆம், நான் உமது பெண்ணா யிருந்தேன். இப்பொழுதென் பிராணநாதரின் மனைவியாகிவிட்டேன். அவருயிரை என்னுயிரைக் கொடுத்தாவது காப்பாற்றுவேன்.

வி. ஆம்! நீ காப்பாற்றினால்தான் உண்டு. தானாக காத்துக் கொள்ளும் திறமை இவனுக் கேது!—

பா. [வேதவதியை ஒருபுறம் தள்ளிவிட்டு] என்ன கூறினீர்! எடும் வாளை, காட்டுகிறேன் என் வீரம்!

வி. ஆ போதும்!— பாஸ்கரா!

[தன் மந்திரபலத்தினுல் அவனைக் கீழே விழச் செய்கிருன்.]

பா. சி! சி! சி! —தர்ம யுத்தமா இது?—வேதவதி! வேதவதி!

[மூர்ச்சையாகி விழுகிருன். வேதவதி அவன்மீது அழுத வண்ணம் விழுகிருள்.]

வே. ஹா! பிராணநாதா! பிராணநாதா!

[புலம்புகிருள்.]

ப. பிராணநாதா! பிராணநாதா! பொறும்! பொறும்! கொல்லாதீர்! கொல்லாதிர்! ஐயோ! ஜன்மத் துவேஷியாயிருந்தபோதிலும் நமக்கு மருமகனுகியபின் அவனைக் கொன்ருல் நமது மகளுக்குத்தானே கெடுதி பிறகு! நமது மகள் விதவையாக நாம் பார்ப்பதோ? நமது குழந்தையின்பொருட்டாவது பாஸ்கரனைக் கொல்லாது விடும். இரண்டாம் மந்திரத்தைப் பிரயோகியாதீர்! வேண்டாம்! வேண்டாம்!

வே. [எழுந்து] அண்ணு; அண்ணு! இது தர்மமா! தர்மமா! ஐயோ! என் பிராணநாதரைக் கொல்லாதேயும்! கொல்லாதேயும்! பிழைப்பூட்டும்! பிழைப்பூட்டும்!

வி. வேதவதி! நீயும் என்னைச் சூது செய்தனை யல்லவா?

வே. ஐயோ! நான் செய்தது தவறுதான், மன்னியும்! மன்னியும்!

ப. பிராணநாதா! தாம் அடஞ்செய்ய லாகாது, மன்னியும்! மன்னியும்! நமது குழந்தையை நாம் மன்னிக்காவிட்டால் யார் மன்னிப்பது!

வே ப. மன்னியும்! மன்னியும்! [மௌனக் காட்சி.]

மூன்றவது அங்கம் முடிகிறது.

## நான்காவது அங்கம்

---

இடம்—நந்தவனத்தில் தடாகத்தின் மத்தியிலுள்ள ஓர் மண்டபம்.

காலம்—காலை.

வேதவதி பழவர்க்கங்க ளடங்கிய ஓர் பாத்திரத்தைக் கையி லெடுத்துக்கொண்டு வருகிறாள்.

வே. இன்னும் கதவுகள் திறக்கக் காலமாகவில்லை போலும். ஐயோ! என் வாழ்வு! என்ன வாழ்வு! நித்யகண்டம் பூர்ணாயுசா யிருக்கிறேனே! என்றாவது பிதாவுக்கு நான் பிடிவாதமா யிருக்கிறேனென்று கோபம் மூண்டுவிட்டால் அதனுடன் தீர்ந்தது என் கதி! என் தாயாரும் பிரயோஜனமில்லையென்று சலித்துவிட்டார்கள்! பிறகு எனக்கு யார் கதி? தெய்வமே கதி!

[மண்டபத்தின் கதவுகள் திறக்கின்றன. உள்ளே ஓர் மஞ்சத்தின்மீது மரண மூர்ச்சையாய்ப் பாஸ்கரன் படுத்திருக்கிறான்.]

[உள்ளே பிரவேசித்து] பிராணநாதா! பிராணநாதா வந்தேன் அடியாள்! ஐயோ! உமது மதி முகத்தால் என்னைத் திரும்பி ஒருமுறை பார்க்கவும் சக்தி யற்றவரா யிருக்கிறீரே! உம்மை வெறுத் தென்ன பலன்? என் பூர்வ ஜன்ம புண்ணியமிது! உம்முடன் நான் கழிக்கும் இந்த இரண்டு நாழிகை தவிர மற்றக் காலமெல்லாம் நான் உயிர் பெற்றும் பிணத்துக்குச் சமானமாகத்தானே இருக்கிறேன். ஐயோ! இந்த இரண்டு நாழிகையும்கூட நான் அனுபவிக்கும் சுக மென்ன? பிராணநாதா! உம தருமைத் திருமேனியைக் காண்பது தவிர வேறென்ன சுகமுண் டெனக்கு? உமது கனிவாய் திறந்து ஒரு முறை யாவது என் பாழுங் காது குளிர 'கண்ணே' என்றொரு வார்த்தையாவது பேசுகிறீரா? இல்லையே! பிராணநாதா! பிராணநாதா! நான் இத் துயரை எத்தனை நாள்

இத் தாணியிற் சகிப்பேன்! இறப்ப தென்ருலும் உம்மைவிட்டு எப்படி இறப்பது என்று மன மெழவில்லை. பிராணநாதா! பிராணநாதா! பிராணநாதா! இதோ இப் பட்சணங்களை அருந்தும். இதோ இப் பழத்தைப் புசியும் இதோ இப் பாலை யருந்தும். ஐயோ! உமது வாய் திறந்து 'வருந்தாதே' என்று ஒரு வார்த்தை கூறும்! கூறும்! பிராணநாதா! பிராணநாதா!

[பாஸ்கரன் உடல்மீது மூர்ச்சை யாகிருள்.]

தினகரன் வேஷம்பூண்ட கிளைனுடன், விக்கிரமபாஹுவும், பத்மினியும் வருகிருர்கள்.

ப. பிராணநாதா, இனி ஒரு தடையும் சொல்லாதீர்! நான் மிகவும் பிரார்த்திக்கிறேன். எத்தனை காலம் நமது பெண் இக் கோலத்தி லிருக்க நாம் பார்த்துக்கொண் டிருப்பது! இவ் வயித்தியர் எப்படியும் பிழைப்பூட்டுவதாகக் கூறுகிருரே, பார்ப்போமே. அதில் என்ன தவறு?

வி. பத்மினி, அது அசாத்தியம். எத்தனை பெயர் முபன்ருர்கள்? ஒருவராவது சொன்ன வண்ணம் செய்தார்களா? என் குல தெய்வத்திற் கன்றி அம் மந்திரம் தெரியாது ஒருவர்க்கும்! இது பிரயோஜனமற்ற காரியம்!

கி. அம் மந்திரம் எனக்கும் தெரியும்!—

வி. தெரியாவிட்டால்?

கி. தெரிந்தால்?

வி. தெரிந்தால், நீர் சொன்னபடி நான் செய்வதாகப் பிரமாணம் செய்கிறேன்.

கி. உண்மைதான?

வி. உண்மைதான்—தெரியாவிட்டாலோ?

கி. தெரியாவிட்டால் என் தலையைக் கொடுக்கிறேன்.

வி. ஆனால் பார்ப்போம் உமது சமார்த்தியத்தை.

கி. ஆனால் முன்பு, பாஸ்கரன் உயிர் பெற்றால் அவன் மீதுள்ள ஜன்மத்துவேஷத்தை யெல்லாம் மறந்து வேத வதியை மனப் பூர்வமாய் மணஞ் செய்விப்பதாகச் சத்தியம் செய்யும்.

ப. பிராணநாதா! பிராணநாதா! அப்படியே செய்யும், செய்யும்! இனி பிடிவாதம் வேண்டாம்.

வி. ஆகட்டும்—அப்படியே.

ப. கண்ணே, வேதவதி, வேதவதி,—எழுந்திரு! இதோ உன் பிராணநாதரை உயிர்ப்பிக்க ஒருவர் வந்திருக்கிறார், எப்படியும் பிழைப்பிப்பார், எழுந்திரு.

வே. [மூர்ச்சை தெளிந் தெழுந்து] ஐயோ! என் னுயிரைக் கொடுக்கிறேன்; என் பிராணநாதரைப் பிழைப்பியும் பிழைப்பியும்!

கி. அரசே, நான் சொன்னபடி முன்பு செய்யும்.

வி. பாஸ்கரன் இப்பொழுது உயிர் பிழைப்பா னுயின் அவன்மீது எனக்குள்ள ஜன்மத் துவேஷத்தை யெல் லாம் மறந்து அவனுக்கு என் மகள் வேதவதியை மனப் பூர்வமாக மணஞ்செய்விக்கிறேன். இது சத்தியம்!

கி. இப்படி வாரும்.

[விக்கிரமபாஹுவின் காதில் ஓர் மந்திரத்தை ஓதி]

இம் மந்திரத்தை மூன்று முறை பாஸ்கரன் காதில் உச்சரியும்—சற்று பொறும்! உச்சரித்தவுடன் பின்னல் மறைந்துகொள்ளும்! இம் மந்திரத்தால் உயிர் பெற்றவர்கள் முன்னிருந்ததைவிட பதின் மடங்கு வீரத்துடன் எழுவார்கள்! ஆகவே சற்று தாம் ஜாக்கிரதையா யிருக்

கவேண்டும். —அம்மா, நீங்களும் சற்று மறைந்திருங்கள். பிறகு எதிர் வரலாம்.

[விக்கிரமபாஹு தவிர மற்ற மூவரும் மறைந்து கொள்கின்றனர். விக்கிரமபாஹு மந்திரத்தை மூன்று முறை பாஸ்கரன் காதில் ஓதிவிட்டுத் தானும் மறைந்துகொள்கிறுர்.]

பா. [திடுகிட்டெழுந்து] விக்கிரமபாஹு ! எடும் வாளை ! என் வீரத்தைக் காட்டுகிறேன் !—இதென்ன இது ? ஒருவரையும் காணேம் !—நான் எங்கிருக்கிறேன் ? என்னைத் தனியாய்விட்டு வேதவதியும் சென்றுளோ ?

வே. [வெளிவந்து] இல்லை ! இல்லை ! பிராணநாதா ! அப்படிச் செய்வேனு நான் ? [கட்டி யணைக்கிறுள்.]

பா. வேதவதி, இது என்ன இது ? நாம் எங்கிருக்கிறேம் இப்பொழுது ? எங்கே உன் பிதா ? என்னைக் கொன்ற பழி தீர்க்கவேண்டும் !

வே பிராணநாதா ! பிராணநாதா ! அவர்தான் உம்மை இப்பொழுது பிழைப்பித்தார் ! அடியாள் உம்மை முதல் முதலாகக் கேட்கும் வேண்டுகோளை மறுக்கலாகாது ! என் பிதாவின்மீதுள்ள கோபமெல்லாம் மறப்பதாகச் சத்தியம் செய்து கொடும்.

பா. மாட்டேன் ! உங்களால்தான் எல்லாம் கெடுகிறது.

கி. [உள்ளிருந்து பாடுகிறுன்.]

ராகம் பைரவி.

பாவை யொருத்தியாற் பட்டா னிராமன் படுதுயரம்

பா. ஆ ! தினகரன் குரல் !—தினகரா !

கின்னரன் தினகரன் உருவத்துடன் வெளி வருகிறுன்.

தினகரா ! தினகரா ! உன்னைக் காணப்பெற்றேனே !

கி. ஆம். தாம் தேச சஞ்சாரம் செய்யப் புறப்பட்ட காரண மென்ன, நீர் செய்த காரிய மென்ன? எல்லாம் மறந்து போய்விட்டீரே! [பாடுகிறான்.]

ராகம்—பைரவி.

மங்கை யொருத்திசா ரங்க தரனுயிர் மாய்த்தனளால்

பா. தினகரா, உலகத்தில் ஸ்திரீகளிலும் ஸ்திரீக ளில்லையா?

கி. அதிலும் உமது ஜன்மத் துவேஷியாகிய விக்கிரமபாஹு வின் பெண்! சீ!

பா. சீ! தினகரா, விக்கிரமபாஹு என் ஜன்மத் துவேஷி யன்று, எனக் குயிரைக் கொடுத்த மாமன்!

விக்கிரமபாஹுவும், பத்மினியும் வெளியே வருகின்றனர்.

வி. சபாஷ்! பாஸ்கரா! நீயே எனக்குத் தக்க மருமகன்.

[பாஸ்கரனும் வேதவதியும் அவர்கள் பாதத்தில் பணிகிறார்கள்.]

பாஸ்கரா, எழுந்திரு; எழுந்திரு, வேதவதி.

[இருவரும் எழுந்திருக்கிறார்கள்.]

நாம் எல்லாம் துதிக்கவேண்டியது இம் மகா புருஷனை யே—ஐயா, தாங்கள் செய்த மஹோபகாரத்திற்கு நாங்கள் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்?

பா. இது யாரா யிருக்கலாம்?

கி. எனக் கொன்றும் வேண்டியதில்லை.— இவ்வளவுக்கும் காரண கர்த்தாவை யனுப்புகிறேன், அவரைத் துதியும். [மறைகிறான்.]

கின்னரன் சுயரூபத்துடன் தோற்றுகிறான்.

வி. ப.
பா. வே. } ஆ! அப்பொழுதே நினைத்தேன்!

ராகம்—சுருட்டி.

வி. என்னையுமே ஈடேற்ற இங்கு வந்தாய் போற்றி
தன்னிகர் மருகனையே தரணியிற் றந்தாய் போற்றி.

ப. ஓதாத எங்களையே உவந்தருள் செய்தாய் போற்றி
பாதாதி மலர்தனையே பார்த்தருள்வாய் போற்றி

வே. காதலனைக் காத்தெனக்குக் கதி கொடுத்தாய் போற்றி
நாதனையே தந்ததற்கு நன்றியென் செய்கேன் போற்றி.

பா. உயிரெனக் களித்தாய் ஒண்டொடி தந்தாய் போற்றி
பயிலுமென் தோழனே பாதம் பணிந்தேன் போற்றி.

நான்காம் அங்கம் முடிகிறது.






*Printed by Dowden & Co., at the "Peerless Press," Madras.